# பதிப்புரை

கவிச்சக்கரவர்த்தி பாரதியாரையும் குருதேவர் என்று காந்தியடிகளால் போற்றப்பட்ட உலகப் புகழ்பெற்ற வங்கக் கவிஞர் ரவிந்திரரையும் ஒப்பு நோக்கி அவர்களது கவிதையுள்ளங்களையும், ஆன்மநேய ஒருமைப் பாட்டுப் பண்புகளையும் தமக்கே இயல்பான அழகிய கம்பீரமான தமிழில் பி. ஸ்ரீ. அவர்கள் தந்துள்ளார்கள். மிக விரிவாக எழுத வேண்டிய ஒரு பொருளை ஆசிரியர் மிகத் தெளிவாகவும் ரத்னச் சுருக்கமாகவும் எழுதி இருப்பது படித்து மகிழ்வதற்குரியதாகும்.

பதிப்பாசிரியர்.

## உள்ளடக்கம்

25-3

# 1. இருபெருங் கவிமணிகள்

ஒருமைப்பாடு என்ற உணர்ச்சியை மக்கள் உள்ளங்களிலே விதைக்க அரும்பாடுபட்ட கவிஞர் இருவருள் வடக்கே கவி ரவீந்திர நாதரையும் தெற்கே சுப்பிரமணிய பாரதியாரையும் சிறப்பாகக் குறிப்பிடலாம். இவர்களில் ரவீந்திரர் உலக ஒருமைப்பாட்டைப் பெரிதும் வலியுறுத்தினர்; பாரதியார் தேசியஒருமைப்பாட்டை முக்கியமாக வற்புறுத்தினர். இருவரும் மக்கட்குல மாட்சியில் நம்பிக்கை கொண்டவர்கள். மக்கள் கூடிவாழும் அவசியத்தை நன்குணர்ந்தவர்கள். இருவரும் இந்தியாவின் தேச பக்த கவிமணிகள்.

ஒரு தேசத்தில் பக்தியுள்ளவனை—பொதுவாக நாட்டுப் பற்று உள்ளவனைத் தேசபக்தன் என்கிறார்கள். ஆனால் உண்மையான தேசபக்தனுக்குத் தேசப்பற்றுடன் அந்தத் தேசத்தின் லட்சியங்கள் மீதும் பக்தி இருக்க வேண்டும். ரவீந்திரநாதரின் எழுத்துக்களில் எல்லாம்—கவிதைகளிலும் கட்டுரைகளிலும்—ஜீவநாதமாக நாம் காண்பது இந்தியத் தேசபக்தியுடன் இந்தியப் பண்பாட்டிலும், இந்தியாவின் ஆன்மாமீதும் உள்ள தனிப்பெரும் பகுதியாகும். பாரதியாருக்கும் இத்தகைய பரந்த, ஆழ்ந்த தேசபக்தி உண்டு.

இந்தியாவின் ஞான பொக்கிஷமான உபநிஷதங்கள் மீதும், புத்தர்பிரானின் அருள்மொழிகள் மீதும், தாகூருக்கு எல்லையற்ற பக்தி உண்டு. தாகூர்—கவிதையின் ஞானவேரே

இவை எனலாம். பாரதியாருக்கும் புத்தர் அருளிலும் உபநிஷத முனிவர்களின் ஞானத்திலும் நம்பிக்கை அதிகம்.

புத்தர் பிரான்அருள் பொங்கிய நாடு

என்று பாரதி குறிப்பிடுவதும், வேத சிகரமான உபநிஷதங்கள் முதலியவற்றை 'ஆணிமுத்துப் போன்ற மணிமொழிகளாலே உலக நலத்தை முன்னிட்டு ஆக்கப்பெற்றவை என்று சிறப்பிப்பதும் சான்றுகளாகும். 'பரசிவ வெள்ளம்' என்ற பாரதியார் பாட்டு ஒருவகைத் தமிழ் உபநிஷதமாகவே அமைந்திருப்பதையும் காண்கிறோம்.

இந்தியாவின் ஞானச் செல்வத்தைப் பெரிதும் போற்றிய ரவீந்திரர் நம் மக்களின் உயர்ந்த கொள்கைகளுக்கும் அனுஷ்டானங்களுக்கும் இடையே மலையும் மடுவும் போலக் காணப்படும் வேற்றுமைகளையும் கண்டு உளம் நொந்து வருந்தினர். பாரதியாரின் 'நெஞ்சு பொறுக்குதில்லையே' என்பது போன்ற பாடல்கள் அத்தகைய வேற்றுமைகளை எண்ணி நைந்த இதயக் குமுறல்கள் என்பதை நாம் அறிவோம். குப்பை உயரக் கோபுரம் தாழ்ந்ததுபோல் பொய்கள் மலிந்து சத்தியம் தேய்ந்த இந்திய வாழ்க்கையைக் கண்டு இரத்தக் கண்ணீர் சொரியும் பாரதியைச் சில பாடல்களில் பார்க்கத்தான் செய்கிறோம்.

வாழ்க்கையை ஆன்மசக்தி என்ற அடிப்படையில் உருவாக்க வேண்டும் என்பது இந்தியப் பண்பாட்டின் ஒரு முக்கிய போதனை. ஆன்மாவே உயிர் வாழ்க்கைமீது ஆதிக்கம் செலுத்தவேண்டும் என்ற இக்கொள்கையை ரவீந்திரநாதர் ஒப்புக்கொண்டார். பாரதியாருக்கும் இக்கொள்கை உடன்பாடுதான் என்பதற்கு இவரது தோத்திரப் பாடல்கள், ஞானப் பாடல்கள் முதலான பல்வகைப் பாடல்களிலும் சான்று கிடைக்கிறது. ஆனல் பாரதியாரின் ஆன்மசக்திக்கொள்கை சக்தி வழிபாட்டின் அடிப்படைக் கொள்கைகளைத் தழுவியது என்பதை நாம் மறந்துவிடலாகாது.

'லண்டன் டைம்ஸ்' பத்திரிகையின் இலக்கியப் பகுதியில் ஒரு சமயம் திறனாய்வாளர் ஒருவர் ரவீந்திரரைப்பற்றி எழுதும்போது, தாகூரைக்காட்டிலும் கவித்துவ சக்தியுள்ள ஒரு மத பக்தனைக் காணமுடியாது என்றும் தாகூரைக் காட்டிலும் மத பக்தியுள்ள ஒரு கவிஞனைக் காண்பது அரிது என்றும் தெரிவித்தார். பொதுவாகக் கவிஞர் அனைவரும் பக்தர்களே—அழகுத் தெய்வத்தின் அருமந்த பக்தர்கள். நமது நாட்டில் பெரும்பாலும் மதபக்தி கவிதையைச் சங்க காலத்திற்குப்பின் உருவாக்கி வந்தபோதிலும், கவிஞனுக்கு மதபக்தி இன்றியமையாதது என்று சொல்ல முடியாது. கவி ரவீந்திரரின் நிலையோ இந்தப் பொதுவிதிக்கு மாறானது; இவரோ அழகுத் தெய்வத்தின் பக்தியுடன் தெய்வ பக்தியும் உள்ளவராகத் திகழ்ந்தார் என்பது பிரசித்தம். இதே நிலைமை பாரதியாருக்கும் பொருந்துவதுதான். ஆனால் பாரதியாரின் தெய்வபக்தி பெரும்பாலும் சக்தி—பக்தி, தேவி பக்தி. ஆகவேதான் தேச அன்னைமீது இவர்கொண்ட பக்தியும் பராசக்திமீது இவருக்குள்ள பக்தியும் இரண்டல்ல ஒன்றே என்று சொல்லும்படி இணைந்துவிட்டன.

ரவீந்திரநாதர் தெய்வ பக்தராக இருந்த போதிலும் இவரைச் சாதாரண மத பக்தர்களுடன் சேர்த்துப் பேசுவது சரியன்று. இவர் மத வெறியர் அல்லர். குறுகிய சமயக் கொள்கைகளையே உண்மையான மதக் கொள்கைகள் என்று நம்பியவருமல்லர், சமய சாரமே இவர் சமயம். இந்திய சமுதாயத்தினிடையே குறுக்குச் சுவர்கள் எழுப்பியுள்ள சமயக் கொள்கைகளை அவை முக்கியமானவை என்று இவர் கருதியதில்லை. இவருக்குப் பக்தியனுபவங்களிலும் அநுபூதி வகைகளிலும் தூய ஞானக் காட்சிகளிலும் நம்பிக்கை உண்டு. இந்தச் சமய ஞான அடிப்படைமீது ஆடம்பரமற்ற அழகிய விசாலமான கட்டடமாக இவர் வாழ்க்கையை அமைத்துக்கொள்ள முயன்றார். இந்தக் கட்டிடத்தின்மீது மங்காத ஒளி எழுத்துக்களில் 'மனிதன் மனிதனுக்குச் செய்யும் அன்புப் பணிதான் ஆண்டவனுக்

குரிய பணியுமாகும்' என்ற மகா வாக்கியம் பொறிக்கப் பெற்றிருப்பதை அகக் கண்ணுல் கண்டு கொள்ளலாம். இனி; இவ்விஷயத்தில் பாரதியாரின் நிலையையும் நோக்கு லாம்.

ரவிந்திரரைப்போல் பாரதியாரும் ஒரு சிறந்தஇந்தியர், ஒரு பெரிய மதபக்தர், குறுகிய கொள்கைகளை எல்லாம் இவர் அறவே வெறுத்தார். இவருக்குப் பராசக்தி மகா காளியாகத் தோன்றியதுடன், கண்ணனுகவும் காட்சியளித் தாள், முருகனுகவும் காட்சியளித்தாள். கலைமகள், உமையம்மை, திருமகள் என்ற தேவிகளாகவும் காட்சி வழங்கினுள். முத்துமாரி முதலான கிராம தேவதைகளாக வும் தோற்றமளித்தாள். தேவி பராசக்தி கிறிஸ்து பெருமான் முதலான தோற்றங்களிலும் தன்னை வெளி யிட்டுக் கொண்டாள்; சூரியன் முதலான இயற்கைப் பொருள்களாகவும் முகம் காட்டினுள். குருவாக வந்தாள்; நண்பனுக வந்தாள்; காதலனுக வந்தாள், 'காதலி'யாகவும் வந்து இவர் பக்தியைப் பெற்றுக் கொண்டாள். பணியா ளன், குழந்தை, முதலான எத்தனை தோற்றங்களில் வந்து பராசக்தி இவர் வாழ்க்கையை வளமுறச் செய்திருக்கிருள்! எல்லாவற்றுக்கும் மேலாகப் பாரத சக்தியாகவும், தமிழ்த் தாயாகவும், சுதந்திர லட்சுமியாகவும், வீர வாழ்க்கையின் அதிதேவதையாகவும் விஜயம் செய்திருக்கிருள். 'வீட்டி லுள்ள குறுக்குச் சுவர்களை இடித்துத் தள்ளு' 'உறையுளை விசாலமாக்கிக்கொள்' என்று தேவி இந்த உபாசகருக்கு உபதேசித்து வந்திருக்கிருள். 'காணிநிலம் வேண்டும்' என்ற பாட்டிலேயே இவரது தூய ஞானக் காட்சியையும், ஆடம்பரமற்ற வாழ்க்கைமீதுள்ள ஆர்வத்தையும் காண் கிறேமல்லவா? தேசப்பணியே தேவிக்குரிய பணி என்பது பாரதியாரின் அதிமுக்கியமான கொள்கை என்பதைச் சொல்லவா வேண்டும்?

துறவு நெறியே தூய நெறி என்று ரவீந்திரரும் நம்பிய தில்லை, பாரதியாரும் நம்பியதில்லை. வாழ்க்கை வாழத்

தான், துறந்து ஓடுவதற்காக அல்ல என்றே இருவரும் கருதினார்கள். எனினும் இருவரும் வைராக்கியத்தைப் போற்றினார்கள், தியாக மனப்பான்மையுடன் வாழ்க்கையை அனுபவிக்க வேண்டும் என்பதையும் வற்புறுத்தினார்கள். 'இன்பமயமான ஆயிரம் பந்தபாசங்களுக்கிடையே விடுதலையைக் காண்கிறேன் என்றார் தாகூர். பாரதியாரும் இறைவனே உயிர்க்குயிராகி மக்களுக்கிடையே சகோதரபந்தத்தையும் பாசங்களையும் ஏற்படுத்தியிருக்கிறான் என்று நம்பினார். எனவே அன்புநெறியையே ஆண்டவனுக்குரிய நெறி என்று கருதினார்.

ரவீந்திரர் இவ்வுலக வாழ்க்கை உண்மையானது என்பதை வற்புறுத்தினார். 'எல்லாம் மாயம்' என்று வாழ்வை வெறுப்பதைக் கண்டித்தார். பாரதியார் சங்கரரின் மேதையைப் போற்றிய போதிலும், மாயாவாதக் கொள்கையை ஒப்புக்கொள்ளவில்லை.

**சித்த மயம்இவ் உலகம்,உறுதிநம்**
**சித்தத்தில் ஓங்கிவிட்டால்—துன்பம்**
**அத்தனையும் வெல்ல லாமென்று சொன்னசொல்**
**ஆரிய ராணியின் சொல்;**

என்ற அளவிற்கே அத்வைத வேதாந்தக் கொள்கையை ஒப்புக் கொள்கிறார்.

வைதிக சனாதன தருமம் என்று சொல்லிக்கொண்டு மனிதனை மனிதன் பிரித்துவைத்த சாதிக் கொடுமைகளை ரவீந்திரநாதர் கண்டித்தார்; இப்படி உட்பகை மூட்டி வெளியேயிருந்து பகைவர்களையும் படையெடுப்புக்களையும் வரவழைத்த மூடநம்பிக்கைகளைத் தகர்த்தெறிந்து உண்மையான நல்வாழ்வு வாழவேண்டும் என்று வற்புறுத்தினார். பாரதியாரும் சாதிச் சிறுநெறியை அறவே வெறுத்து,

'சாதி மதங்களைப்' பாரோம் என்றார்.
ஆயிரம் உண்டிங்கு சாதி—எனில்
அன்னியர் வந்து புகல்என்ன நீதி?

என்று அன்னியரை நோக்கிக் கேட்ட போதிலும்,

ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே

என்று நம்மவருக்கு இடித்து அறிவுறுத்தினார்.

'எவ்வுயிரும் இறைவன் கோயில்; மனிதன் இவ்வுலகில் ஆண்டவனின் முக்கியமான சந்நிதி' என்றார் தாகூர். ஒவ்வொரு மனிதனும் இறைவனுடைய சந்நிதியாகத் திகழ்வதால், எல்லா மக்களுக்கும் தெய்வ மாட்சி உண்டு, தூய நன்னிலை அடைய உரிமையுண்டு என்பதை வற்புறுத்தினார். இந்த அடிப்படை வேதாந்தக் கொள்கையை உணர்ந்து கொண்டால் ஏற்றத்தாழ்வுகளுக்கு இடமில்லை என்றார் தாகூர். சாதி முத்திரையிட்டு மனிதனோடு மனிதன் கூடி வாழாது பிரித்து வைப்பதற்கோ, வேறு வகுப்புச் சுவர்கள், இனச்சுவர்கள் குறுகிய மதச்சுவர்கள் முதலியவற்றை எழுப்புவதற்கோ சிறிதும் இடம் கிடையாது என்றார். இக்கொள்கைகளெல்லாம் பாரதியாருக்கும் உடன்பாடே என்பதற்கு இவரது பல பாடல்களும் சான்று தருகின்றன.

மனிதர்கள் சாதிக்கூடு, மொழிக்கூடு, இனக்கூடு, சமயக்கூடு முதலான கூடுகளில் தனித்து வாழ முடியாது என்று கருதிய ரவீந்திரர் இந்தியா தனித்து வாழ முடியாது என்பதையும் தெளிவுபடுத்தினார். விரிந்த உலகத்தோடு ஒட்டி வாழவேண்டும்; தன் ஞானச் செல்வத்தை ஆன்ம சம்பத்தை அள்ளி வழங்க வேண்டும் என்கிறார். உலகத்தின் பிற நாடுகளிலிருந்து சிறந்த அம்சங்களையும் நாம் பெற்றுக் கொள்ள வேண்டும் என்றும் வற்புறுத்துகிறார் ரவீந்திரர். இக் கருத்துக்களையும் வேறு பண்பாடுகளின் சிறந்த அம்சங்களையும் நாம் பெற்றுக் கொள்ள வேண்டும் என்றும் வற்புறுத்துகிறார் ரவீந்திரர். இக்கருத்துக்களையும் பாரதி வாக்கு

வற்புறுத்துவதைக் காண்கிறோம். பண்டைக் காலத்திலும், பல தேசங்களிலிருந்து, யாத்திரிகர்கள், அறிவைத்தேடி இங்கே வந்ததுண்டு என்பதைக் குறிப்பிடும் பாரதியார், இன்றும் பிறநாடுகளுக்கு ஞானதானம் செய்ய வேண்டியது நம் கடமையும் உரிமையும் ஆகும் என்கிறார்.

'உலகத்துயர் யாவையும் அன்பினில் போகும்' என்ற புத்த தருமத்தைப் பிறநாடுகளில் பரப்பிய இந்தியா, இன்றும் வேத வேதாந்தப் பொருளைப் பிறநாடுகளுடன் பங்கிட்டுக் கொள்ள வேண்டியது அவசியம் என்கிறார்.

காலக் கடலுக்குள் பாலமிட்டாள்

என்று சொல்லும்படி ஞானப் பெருவாழ்வு வாழ்ந்து வந்திருக்கும் அன்னை 'இச்சகத்தில் பூரணமா ஞானப் புகழ் விளக்கை நாட்டுவித்த பாரதமா தேவி' தன்ஞான ஒளியைத் தனக்கு மட்டும் குடத்தில் ஏற்றிய விளக்கைப் போல் வைத்துக்கொள்ள முடியாது என்கிறார். 'பேசுக சத்தியமே, செய்க தருமமே' என்று முழங்கும், வேதமுரசு இந்தியாவுக்கு மட்டும் முழங்கவில்லை. உலகத்திற்கெல்லாம் பொதுவாக முழங்குகிறது. இது உலக அன்னையாகிய பராசக்தியின் முன் வாசலில் முழங்கிக் கொண்டிருக்கும் ஞானமுரசு என்கிறார்.

அரசியல் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் ஒற்றுமை வேண்டியதுதான், ஆனால் இது ஒருவகைச் செயற்கை ஒற்றுமைதான், உண்மையான ஒற்றுமை உள்ளங்கள் ஊடாடும் போதுதான் ஏற்படும், இதயங்களின் இணைப்பிலேதான் காணப்படும் என்கிறார். பண்டமாற்றுதல், வாணிப உறவு, ஏற்றுமதி இறக்குமதிகள் எல்லாம் தேவை. ஆனால் பண்பாடுகள் என்ற பண்டமாற்று, உலக ஒற்றுமைக்கு இன்றியமையாதது என்கிறார், பாரதியாரும்.

சீன மிசிரம் யவனரகம்—இன்னும்
தேசம் பலவும் புகழ்வீசிக்—கலை
ஞானம் படைத்தொழில் வாணிபமும்—மிக
நன்று வளர்த்த தமிழ்நாடு.

என்று தமிழகத்தின் பழைய நிலையை விளக்கி, இன்னும் நாம் அத்தகைய துறைகளில் புதுப் புது முறைகளில் ஈடுபட வேண்டும் என்பதை உய்த்துணர வைக்கிறார்.

உலகப் பண்பாடுகளெல்லாம் சந்தித்துப் பயன் பெறுவதற்காகவும், உலக மக்களுக்கிடையே ஒருமையுணர்வு ஏற்படுவதற்காகவும் விசுவ பாரதி என்ற ஒரு கலா நிலையத்தை உருவாக்கினார் ரவீந்திரநாத தாகூர். ஆனால் அத்தகைய வசதி ஒன்றும் நம் தமிழ்க் கவிஞருக்குக் கிடைக்கவில்லை. பாரதியாரின் விசுவபாரதி நம்மால் தேர்ந்தெடுக்கப்பெறும் இவர் பாடல்களே யாகும். இப்பாடல் தொகுதியில் தேசியப் பாடல்களைக் காட்டிலும் வேறு பாடல்களிலிருந்து தேர்ந்தெடுக்கப் பெறுவனவே விசேஷமாக இடம் பெறும் என்று நம்புகிறேன். உதாரணமாக, 'ஊழிக் கூத்து' என்ற பாடல் உலக இலக்கியத்திலே இடம் பெறவேண்டிய ஒரு பாடலாக மதிக்கப் பெறலாம். கண்ணன் பாடல்களிலும் சில பாடல்களைப் பாரதியாரின் சிறப்புக் கவிதைத் தொகுதிக்காகத் தேர்ந்தெடுக்கலாம். குயில் பாட்டையும் இத்தொகுதியில் சேர்த்துக் கொள்ளலாம். 'பரசிவ வெள்ளம்' முதலான வேறு சில பாடல்களுக்கும் இத்தொகுதியில் இடம் கிடைக்கலாம்.

ரவீந்திரரின் பாடல்களிலும் வசனங்களிலும் கிழக்கும் மேற்கும் இணைந்து வாழக்கூடிய பல அம்சங்கள் காணப்படுகின்றன என்று கருதுவது பொருத்தமே. பாரதியார் பாடல்களிலும் இத்தகைய சில அம்சங்களைக் காணமுடியும்; எனினும் பொதுவாகத் தென்னகமும் வடஇந்தியாவும் ஒத்து வாழ்வதற்குரிய அம்சங்களையே இவர் வாக்கில்

காண்கிறோம். உதாரணமாக, இவரது சக்திப் பாடல்கள் வடக்கும் தெற்கும் இணையத்தக்க ஒரு தங்கச் சங்கிலி போன்றவை எனலாம். இவர் காளி உலக அன்னைதான்; எனினும் பொதியம் முதல் இமயம் வரையுள்ள நம் தேசத்திற்குச் சிறப்பாகச் சாகாவரம் அளித்திருக்கும் மகாசக்தி.

சென்ற காலத்திற்கும் நிகழ்காலத்திற்கும் நமது எதிர்காலத்திற்கும் கூடப் பொற்பாலங்களாக அமைந்திருக்கும் பெருங்கவிதைகளை ரவீந்திரர் இயற்றியுள்ளார். மகா கவிதை முக்காலங்களுக்கும் பொதுவானதுதானே. பாரதியாரும் காலக் கடலுக்கு ஒரு பாலம் இட முயன்றவர்தாம். இவர் பாடல்களிலும் கால வெள்ளத்தை எதிர்த்து நிற்கும் இசைக் கோயில்கள் உண்டு. இப் பாடல்களையும் ஒப்பிட்டு ஆராய்ந்து முடிவான கருத்துக்களைத் தெரிவிப்பதற்குத் தமிழ் வங்காளம் என்ற இரு மொழிப் புலமையும் திறமாக அமைந்துள்ள திறனாய்வாளர்கள் முன்வரவேண்டும்.

ஒரு சமயம் வங்கநாட்டுத் தேசீய கவிமணியாகிய ஸரோஜினிதேவி பாரதியாருக்கு அஞ்சலி செலுத்திய போது, 'கவி பாரதியார் ஒரு கவிஞருக்குரிய உண்மையான நோக்கத்தைப் பூர்த்தி செய்திருக்கிறார்' என்று கூறினார். கவியரசரான தாகூரைப் போல் இவரும் அழகுப் படைப்புக்களான பாடல்களைப் பாடியிருக்கிறார் என்று ஸரோஜினி தேவியின் கருத்து என்று ஊகிக்கலாம். அழகு என்றால், கவிதையிலுள்ள சொல்லழகு பொருளழகுகள் மட்டுமல்ல; சொல்லில் இல்லாத இசையழகையும் இன்பத்தையும் சொற்களின் ஒரு வகை மந்திரச் சேர்க்கையால் பிறப்பித்து மக்கள் உள்ளங்களில் அழகுத் தெய்வத்தின் ஒளி காட்டுவது தான் அது. லட்சக்கணக்கான மக்கள் உள்ளங்களில் ஒளி காட்டி நெறி காட்டியிருக்கிறார் தாகூர். பாரதியாரும் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாகப் பல்லாயிரக் கணக்கில் விடுதலைக்காதலும் ஆவேசமும் பெறுவதற்கு உதவியிருக்கிறார் என்பதையும், அத்தகைய காத

லால் தேசப்பணிக்கு அவர்கள் தங்கள் வாழ்க்கையை அர்ப் பணித்திருக்கிறார்கள் என்பதையும் ஸரோஜினிதேவி சுட்டிக் காட்டுகிறார்.

ஸரோஜினிதேவியை அரசியலுக்குக் கலையழகு தந்த கவிமணிகளில் ஒருவர் என்றார் பண்டித ஜவாஹர்லால் நேரு. இவர் காலஞ் சென்றதீ குறித்து ஒரு தீர்மானம் பிரேரித்துப் பேசும்போது நெஞ்சுருகி அஞ்சலி செலுத்திய ஜவாஹர்லால், ஸரோஜினிதேவியை ஒரு 'தேசியச் சங்கிலித் தொடர் என்று கூறி, இவர் கிழக்கையும் மேற்கையும், இந்தியாவின் பல்வேறு பகுதிகளையும் ஒன்றாகப் பிணைத்த லட்சிய ராஜதூதர்' என்றார். ஆனால் ரவீந்திரரைப் போல் கவிதைத் துறையில் ஸரோஜினிதேவிக்கு நிலைத்த பெயர் கிடைத்திருக்கவில்லை என்பதைப் பண்டித ஜவாஹரும் நன்கு அறிவார்.

ஸரோஜினிதேவியும் ஒரு சிறந்த கவிஞரே; கவியாகவே தம் வாழ்க்கையைத் தொடங்கினார். ஆனால் நிகழ்ச்சிகள் இவரைத்தேசீயப்போராட்டத்தில் பங்கெடுத்துக் கொள்ளு மாறு இழுத்துக் கொண்டன. அந்த நிலையில் உற்சாகத் துடன் கவிதைத் துறையிலிருந்து அரசியல் துறைக்குத் தாவினார் என்றும், அப்பால் அதிகம் கவிகள் எழுதப் பேனாவையும் காகிதத்தையும் தேடவில்லை என்றும் ஜவாஹர் சொல்லுகிறார். 'நமது தேசீயப் போராட்டத் தையே இசையாக்கி விட்டார். தேசத் தந்தையான காந்தியடிகள் அரசியலில் தருமத்தைப் புகுத்தினார் என்றால் ஸரோஜினிதேவி அரசியலுக்குக் கலையழகு ஊட்டினார் என் கிறார் ஜவாஹர். ஆனால் ரவீந்திரநாதரின் வாழ்க்கையோ அரசியலைக் கடந்து கவிதையில் லயித்துவிட்டது என்று கூறுவதைக்காட்டிலும், கவிஞர் என்று மதிப்பிடுவதே பொருத்தமானது.

'உள்ளம் இசைபாட அவர் போராட்டத்தை நடத் தினார். உதட்டில் இசையுடனும், முகத்தில் புன்முறுவலுட

னும், கஷ்டத்தை எதிர்த்து நின்ருர் என்று ஜவாஹர் ஸரோஜினியைக் குறித்துக் கூறுகிருர். அவரைக் கவிஞர் பிரதிநிதி என்று கூறுவதைக் காட்டிலும் கலாசாரத்தின் பிரதிநிதி என்றே கூற வேண்டும். இதை நன்குணர்ந்தே ஜவாஹர்லால், 'கலாசாரத்தின் இந்தச் சிறந்த பிரதிநிதி கீழ்நாட்டுப் பண்பாட்டையும் மேல் நாட்டுப் பண்பாட்டை யும் இணைக்கும் சங்கிலிபோல் விளங்கினுர்' என்கிருர். ஆனுல் ரவீந்திரநாததாகூரையும் பாரதியாரையும் நாம் பிரதிநிதிக் கவிஞர்களாகவே நினைத்துப் பார்க்கிருேம்.

ஒரு வகையில். பாரதியாரையும் ரவீந்திரரையும் ஸரோஜினி தேவியையும் நம் தேசீய கவிமணிகள் மூவர் என்று குறிப்பிடக்கூடும். இம்மூவரும் தேசத்திருப்பணியில் ஈடுபட்டவர்களே. இம்மூவரும் தேசமக்களின் உள்ளத்தில் நிலைபெற்று வாழக்கூடியவர்கள் என்பதும் பொருத்தமே. ஆனுல் இவர்களில் ஆங்கில மொழியில் கவிதைகள் தந்த ஸ்ரோஜினியைக் காட்டிலும், வங்கமொழியில் கவிதை கள் பாடிய ரவீந்திரரும் தமிழ் கவிதைகள் பாடிய பாரதியாருமே கவிஞர்களின் முன்னிலையில் நிற்பவர் கள். இவ்விருவரும் தேசமக்களின் உள்ளத்தில் கவிஞர் என்ற சிறப்புரிமையுடன் நிலைத்திருப்பார்கள்; கவிதைத் துறையில் வழிகாட்டிகளாகவும் விளங்குவார்கள். ஸரோஜினி அரசியலுக்குக் கவியழகு தந்த கவிதாரத்தினம் என்ருல் பாரதியாரும் ரவீந்திரரும் கவிமணிகள் என்ற சிறப் புரிமை பெற்றிருப்பவர்கள். இவர்களில் ரவீந்திரர் மகாகவி; பாரதியார் தேசீய மகாகவி. ரவீந்திரர் உலகறிந்த கவிஞர்; பாரதியாரும் உலகமறிந்து கொள்ள வேண்டிய கவிஞரே.

ரவீந்திரரைப்போல் பாரதியாரும் இயற்கைக் காட்சி களால் வசீகரிக்கப் பெற்ருர். தேசத்தின் ஞான பொக்கிஷங் களும் இதிகாசச் செல்வங்களும் பாரதியாரின் கவியுள்ளத் திற்கும் ஊட்டமளித்தன. பாரதியார் ரவீந்திரரைப்போல் பல இடங்களிலும் யாத்திரை செய்வதற்குரிய வசதி பெற வில்லை; எனினும் ரவீந்திரர் இமயக்காட்சிகளை அனுபவித்த

அதே கவியுள்ளத்துடன் பாரதியார் பொதிய மலைக்காட்சிகளை அனுபவித்திருக்கிறார். இவரும் சௌந்தரியங்களுக்கிடையே தூயமென்மையான காற்றைப்போல் சுதந்திரமாய்த் திரிந்திருக்கிறார்.

ரவீந்திரருக்கும் பாரதியாரைப் போல அதிகமான பள்ளிப் படிப்பு இல்லை. பள்ளிக்கூடத்தில் ரவீந்திரருக்கு மனத்திருப்தி ஏற்படவில்லை. திருநெல்வேலிக் கல்விச் சாலையில் தமக்கு ஏற்பட்ட அதிருப்தியைப் பாரதியார் சுயசரிதையில் பாடியிருப்பது மிகவும் பிரசித்தமானது.

**செலவுதந்தைக்கோர் ஆயிரம் சென்றது.**
**தீதுஎனக்குப் பல்லாயிரம் சேர்ந்தன**
**நலம்ஓர் எள்-துணையும் கண்டிலேன்இதை**
**நாற்பதாயிரம் கோயிலில் சொல்லுவேன்**

என்று இவர் பாடியிருப்பதை அறியாதார் யார்?

ரவீந்திர நாதருக்கு வீட்டில் கவிதை உணர்ச்சி வளர்ந்தோங்குவதற்கு வசதிகள் இருந்தன. பாரதியாருக்கோ கவிதை ஆர்வத்தைத் தூண்டக்கூடிய வசதிகள் வீட்டிலும் கிடைக்கவில்லை. எனினும் எட்டையபுரத்தில் ஜமீன்தாரின் அரண்மனையில் இவரது ஆர்வத்திற்கு உரிய தூண்டுகோல் காணப்பட்டது. அங்கே கூடிய தமிழ்ப் புலவர்களும் இசைக்கலை நிபுணர்களும் அறிந்தும் அறியாமலும் இவரது தமிழன்பைத் தூண்டிவிட்டார்கள். ஜமீன்தாரின் பாராட்டும் இவரது கவிதை முயற்சிகளுக்கு ஒருவித உரமாக உதவியது.

ரவீந்திரரின் செல்வநிலை பொதுவாக இவர் மேதை வளர்ந்தோங்குவதற்குப் பல வகைகளிலும் துணைபுரிந்தது. இங்கிலாந்துக்குச் சென்று திரும்புவதற்கும் வசதி கிடைத்தது. குடும்பச் சொத்துக்களை மேற்பார்வையிட்ட வண்ணம் இவர் கலை வளர்த்தார், கவிபாடினார்; இல்லறம் நடத்தினார். பாரதியாரையோ வறுமை வாட்டியது, எனினும்

புலமை வளர்ந்தது; இலக்கிய ஈடுபாடு ஏற்பட்டது. பிழைக்கும் வழிதேடித் தமிழாசிரியராகவும் பத்திரிகையாசிரியராகவும் அமர்ந்திருக்கும் நிலையிலேதான் தேசிய உணர்ச்சியும் கவிதையுணர்ச்சியும் இவரை ஆட்கொண்டன. புதுவையில் கவிதை பழுத்தது. இங்கும் வறுமை வாழ்வுதான்.

ரவீந்திரர் தம் ஐம்பதாவது வயதில் கீதாஞ்சலி பாடி நோபல்பரிசும் மேலைநாட்டுப் பாராட்டுகளும் பெற்றார்; அன்னிய அரசாங்கமாகிய பிரிட்டிஷ் அரசாங்கத்தாலும் பாராட்டப்பெற்று ஸர் பட்டமும் பெற்றார். பாரதியாரோ நாற்பதாவது வயதில் அடியெடுத்துவைக்கவும் இல்லை; பட்டம் பரிசு பாராட்டுகள் பெறவும் இல்லை. புதுச்சேரியில் மதிலில்லாத சிறையில் விலங்கில்லாத கைதிபோல் வாழ்ந்தபின் பிரிட்டிஷ் இந்தியாவிற்கு வந்தார்; கடலூரில் கைது செய்யப்பட்டு கொஞ்சகாலம் சிறைவாசமும் பெற்றார். கடையத்தில் கிராமவாழ்க்கையைச் சற்று வாழ்ந்தபின் சென்னை வாழ்க்கையை மீண்டும் வாழ்ந்து வறுமைத் துன்பத்திலேயே மறைந்தார்.

இங்கிலாந்துக்குப் பல தடவைகள் சென்றதுடன் ரவிந்திரநாதர் உலக யாத்திரை செய்ததும் உண்டு. உலக நாடுகளில் முக்கியமானவற்றைப் போய்ப் பார்த்தார். பீகிங் என்ற சீனத் தலைநகரில் சீனச் சக்கரவர்த்தியால் வரவேற்கப் பட்டதும் உண்டு. ருஷ்யா முதலான நாடுகளிலும் வரவேற்கப்பெற்றார். இப்படியெல்லாம் உலகம் போற்றும் உத்தமராகிவிட்டார். பாரதியாருக்கோ, இத்தகைய வாய்ப்பு என்றுமே கிடைக்கவில்லை. எனினும் கவிதாதேவியின் அருட்செல்வம் தாகூருக்குக் கிடைத்ததுபோல் இவருக்கும் கிடைத்துவிட்டது. கலைகளில் உள்ள ஈடுபாட்டிலும் இவர் தாகூருக்குக் குறைந்தவரில்லை என்று கருதலாம். அரசியல், விஞ்ஞானம், வரலாறு முதலான பல துறைகளிலும் தாகூர் ஈடுபட்டுப் பயின்றதுண்டு என்பதற்கு இவரது நூல்களில் வரும் உவமைகளே சான்று தருகின்றன. வான

நூலிலும் தாகூர் ஈடுபட்டதுண்டு. ஏன் ஓவியக் கலையிலும் ஈடுபட்டார். பாரதியாரின் புலமையில் இத்தகைய பரப்பைக் காண முடியாது; ஆனால் ஈடுபாட்டுக்குக் குறை வில்லை; சில கலைகளில் ஆழ்ந்த பயிற்சியும் உண்டு.

பல்வேறு கலைத்துறைகளிலும் ரவீந்திரர் தொண் டாற்றிப் புகழ் பெற்றிருக்கிறார். தமது நீண்ட வாழ்நாளில் ஆயிரக்கணக்கான பாடல்கள் பாடியதுடன், சிறுகதை, கட்டுரை, நாடகம், கடிதம், முதலான பல்வேறு இலக்கியத் துறைகளிலும் சோதனைகள் நடத்தி வெற்றியும் பெற்றிருக் கிறார். கலா சிருஷ்டியில் இத்தகைய பெரும் பரப்பை நாம் பாரதியாரிடம் காணமுடியாது; பல வசதிக்குறைவு களுடன் கவலை நிறைந்த வறுமை வாழ்வு வாழ்ந்த பாரதி யாரும் தம்மால் எவ்வளவு கலைப்படைப்புகளைச் செய்ய முடியுமோ அவ்வளவும் செய்து பார்த்திருக்கிறார் என்பதே அதிசயம்தான்.

ரவிந்திரநாதர் வசிகரமான தோற்றமுள்ளவர். ஞான ஒளிவீசும் மகான்களிலொருவராகக் காட்சியளித்தார். பாரதியாரின் தோற்றமும், முக்கியமாக அவர் பாடும் போது தமிழர் உள்ளம் கவர்ந்த தோற்றமாகவே இருந்தது. தாகூரின் குரலை உள்ளம் உருகிவரும் இசைக்குரல் என்று சொன்னால், பாரதியாரின் குரலை வெண்கலமணிக் குரல் என்றும், வீரமுரசின் முழக்கம் என்றும், சுதந்திரச் சங்க நாதம் என்றும் குறிப்பிடவேண்டும்.

# 2. வேரும் விளைவும்

திருநெல்வேலி மாவட்டத்தில் இன்று எட்டையபுரம் பாரதியாரின் ஊர் என்று பிரசித்தி பெற்றிருக்கிறது. மற்றைப்படி இன்று இதற்கு வேறு ஒரு சிறப்பும் இல்லை. ஆனால் ஆங்கிலக் கும்பினியார் வணிகராக வந்து அரசராக முயன்று வந்த காலத்தில் எட்டையபுரத்தை ஆண்டு வந்த ஜமீன்தார் அன்று ஆங்கிலேயருக்கு விரோதியாக இருந்த பாஞ்சாலங்குறிச்சி வீரனன கட்டப்பொம்மனுக்கு விரோதி யாகி வெள்ளையர்களின் தோழர் என்று புகழ் பெற்றிருந் தார். கட்டபொம்மனின் வீரசுதந்திர உணர்ச்சியைப் பாராட்டியவர்கள் எட்டையபுரத்துக்குக் குறுநில மன்னரை நாட்டின் துரோகி என்றே கருதினர்கள். ஆனால் எட்டைய புரத்தைத் தமிழ் வளர்ப்புப் பண்ணைகளில் ஒன்று என்று தமிழ்நாடு முழுவதும் கருதியது. எட்டைய புரத்து ஜமீன் தார்கள் தமிழ்ப்புலவர்களை ஆதரித்தார்கள். இசை முதலிய கலைகளையும் ஆதரித்து வந்தார்கள்; தமிழ்க் கவிராயர்களை அபிமானித்துப் பரிசுகள் வழங்கி வந்தார்கள்.

கடல்முழங்கிய தெனமுழங்கிய
கவிமுழங்கிய வாசலான்

என்று எட்டையபுரத்துக் குறுநில மன்னரைக் கவிராயர் கள் போற்றிப் புகழ்ந்தார்கள்.

எட்டையபுரம் வளர்த்த தமிழ்க் கவிதையில் அழகு ணர்ச்சி மனேபாவம் இசையமைதி முதலான பண்புகளைக் காட்டிலும் முழக்கம் அல்லது ஆரவாரம் அதிகமாகவே

இருந்தது என்று கருதலாம். எனினும் அக்கவி முழக்கம் பாரதியாருக்குத் தமிழன்பு மூட்டிக் கவிதை ஆர்வத்தையும் தூண்டிவிட்டது. பாரதியாரின் முன்னோர் எட்டையபுரத் தாரல்லர். இவர் தந்தையார் திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்த வேறொரு கிராமத்திலிருந்து எட்டையபுரம் வந்து குடியேறியவர். 'எட்டையபுரம் ராஜா' என்று அழைக்கப் பட்ட குறுநிலமன்னர், பாரதியாரின் தந்தையாரான சின்னச் சாமி அய்யரின் தமிழ்ப் பயிற்சியையும் வேறு தகுதிகளையும் மதித்துத் தமது சபையில் முதன்மையான இடமளித்து ஆதரித்து வந்தார். அவர் மகனான பாரதியாரும் எட்டைய புரத்துச் சபையில் முழங்கிய தமிழைக் கேட்டுக் கேட்டுத் தாய்மொழியில் பேரன்பு கொண்டார்.

பாரதியாரைக் கருவிலே திருவுடைய கவி என்று வாழ்க்கை வரலாறு தெரிவிக்கிறது. பிராசமும் மோனை யும் சர்வசாதாரணமாகக் குழந்தைப் பிராயத்திலேயே வந்துவிட்டனவாம். பளிச்சுப் பளிச்சென்று பதில் சொல் லும் திறமையும் வாய்த்திருந்ததாம். தமிழ்ப்பண்டிதர் ஒருவர் குழந்தை பாரதியை நோக்கி, 'காளமேகமே கவி மழை பொழிவாயோ?' என்று கேட்டதும், 'மேகம் தங்கள் உத்தரவுப்படி பெய்வதில்லையே' என்று உடனே பதில் வந்து விட்டதாம். இத்தகைய ஆற்றலைப் பெரிதும் தூண்டி வளர்த்திருக்கவேண்டும் எட்டையபுரத்து ராஜசபையில் முழங்கிய தமிழ் முழக்கம்.

பள்ளிப் படிப்பில் பாரதியாருக்குப் புத்தி செல்லவில்லை; எனினும் தமிழ்க் கவிதை மோகம் குன்றாது வளர்ந்த வண்ணமாயிருந்தது. காவடிச்சிந்து போன்ற பாடல் களிலும், நாடோடிப் பாடல்களிலும் இவர்தம் உள்ளத் தைப் பறிகொடுத்தார். இவர் கவித்திறத்தையும் வாக்குச் சாதுரியத்தையும் ஜமீன்தார் பாராட்டுவாராம், 'பாரதி' என்ற பட்டத்தை இவர் தம் பிள்ளைப் பிராயத்திலேயே பெற்று விட்டாராம். இவரது இயற்பெயர் 'சுப்பிர

மணியன்'. 'சுப்பையா' என்று நண்பர்கள் அழைத்து வந்தார்கள். பாரதியார் தம் பிள்ளைப் பிராயத்து நிலையைப் பின்வருமாறு பாடியிருக்கிறார், 'மூன்று காதல்' என்ற தம் பாட்டின் தொடக்கத்திலே:

பிள்ளைப் பிராயத்திலே—அவள்
பெண்மையைக் கண்டு மயங்கிவிட்டேன்; அங்கு
பள்ளிப் படிப்பினிலே—மதி
பற்றிட வில்லை யெனிலும் தனிப்பட
வெள்ளை மலரணைமேல்—அவள்
வீணையுங் கையும் விரிந்த முகமலர்
விள்ளும் பொருளமுதும்—கண்டு: என்
வெள்ளை மனது பறிகொடுத்தேன், அம்மா!

இந்தக் கவிதா தேவி இவரைப் படுத்தியபாடு கொஞ்சமோ? தம் விருப்பத்திற்கிணங்கக் கவிதை வசப்பட வில்லை என்பதை இவர் அந்த இளம் பிராயத்திலேயே ஓர் அளவு உணர்ந்து கொண்டதாகவே தோன்றுகிறது. சிலேடை பாடினார்; சிந்துகவி பாடினார்; திருப்தி ஏற்பட வில்லை. இன்னும் என்னென்னவோ பாடவேண்டுமென்று ஆசைதான். ஆனால் ஆசை இன்னும் ஆற்றலாகப் பரிண மித்து விடவில்லை. இந்தப் பிள்ளைப் பிராயக் கனவுகளும் ஏமாற்றங்களும் கவிதா தாகமும் மோகமும் எல்லாம் ஒரு பாட்டாக உருவெடுத்து வந்திருக்கின்றன பின்னாளிலே.

ஆடி வருகையிலே—அவள்
அங்கொரு வீதி முனையில்நிற்பாள்; கையில்
ஏடு தரித்திருப்பாள்—அதில்
இங்கித மாகப் பதம்படிப் பாள், அதை
நாடி யருகணைந்தால்—பல
ஞானங்கள் சொல்லி இனிமை செய்வாள், "இன்று
கூடி மகிழ்வ"மென்றால்—விழிக்
கோணத்திலே நகை காட்டிச்செல் வாள் அம்மா!

எட்டு வயதுப் பாலனுக இருக்கும்போதே ரவீந்திர நாதரும் பாரதியாரும் பாட்டுக் கட்டுவதில் ஆசை கொண்டிருந்ததாக வாழ்க்கை வரலாறுகள் தெரிவிக்கின்றன. இவர்களிருவரும் கவிதைக்காகவே வாழப் பிறந்தவர்கள் அல்லவா? குழந்தைப் பருவத்திலே பாரதியாருக்குப் பிராசம் போடுவதிலே இருந்த ஆசையும், ரவீந்திரருக்கு அழகிய வடமொழிச் சொற்களைக் கொண்டு குவிப்பதிலிருந்த ஆசையும் இவர்களுடைய கவிதைப் பயித்தியத்திற்கே சான்றுகளாகும். பிள்ளைப் பிராயத்திலே பள்ளிப் படிப்பில் அபிவிருத்தி இல்லாவிட்டாலும் ஆங்கில நூல்களில் ஷெல்லி, பைரன் முதலான கவிஞர்களின் பாடல்களில் இவருக்கு ஈடுபாடு ஏற்பட்டு விட்டது. ரவீந்திரநாதருக்கும் பிள்ளைப் பருவத்திலேயே ஆங்கிலப் பாடல்கள் பல மனப்பாடம் ஆகியிருந்தன. ஷெல்லிதாசன் என்று கூடப் பாரதியார் தமக்கொரு புனைபெயர் இட்டுக் கொண்டிருந்தாராம்.

நாளடைவில் பல புதிய அனுபவங்களுக்கிடையே பாரதியாருக்கு உண்மைக் கவிதை உதயமாகிவிட்டது என்ற உணர்ச்சியும் ஏற்பட்டிருக்க வேண்டும். அந்த உதயம் இன்னும் கைக்கு எட்டிய கனியாகிவிடவில்லை, எனினும் அது லட்சிய உதயம்தான். இந்தக் கவிதானுபவத்தையும் பாரதியார் பாடியிருக்கிறுர். களம் ஆற்றங்கரையில் ஒரு தனி மண்டபம், தென்றல் விசுகிறது. பாரதியார் ஏதேதோ கனுக் காண்கிறுர். எட்டாதது எட்டிவிட்டது போன்ற ஓர் உணர்ச்சி திடீரென்று ஏற்படுகிறது. 'ஒரு கவிதை கிடைத்துவிட்டது, இதுவரை பாடிவந்தது போன்ற சிலேடைப் பாட்டல்ல. பிராசங்கள் மோனைகளின் குவியல் அலல; இது உண்மைக் கவிதை' என்று தமக்குத்தாமே சொல்லிக் கொள்ளுகிறுர். ஆனல் இந்த அனுபவம் தொடர்ச்சியாக அமைந்துவிடவில்லை. இத்தகைய அனுபவம் மட்டும் தொடர்ந்து அமைந்து விட்டால்......? என்று ஆலோசனையில் ஆழ்ந்து போகிறுர்.

இப்புதிய கவிதானுபவம் பற்றிய பாட்டு 'மூன்று காதல்' என்ற தலைப்பில் சரஸ்வதி காதல் என்ற முதலாவது பகுதியில் மூன்ருவது பாட்டாக அமைந்திருக்கிறது. ஓதி ஓதி உணர்ந்துகொள்ள வேண்டிய அருமையான வாக்கு இது;

**ஆற்றங் கரைதனிலே—தனி**
**ஆனதோர் மண்டப மீதினிலே, தென்றற்**
**காற்றை நுகர்ந்திருந்தேன்—அங்கு**
**கன்னிக் கவிதை கொணர்ந்து தந்தாள்; அதை**
**ஏற்று மனமகிழ்ந்தே—'அடி**
**என்னே டிணங்கி மணம்புரி வாய்'என்று**
**போற்றிய போதினிலே—இளம்**
**புன்னகை பூத்து மறைந்துவிட்டாள், அம்மா!**

'கன்னிக் கவிதை கொணர்ந்து தந்தாள் என்ற அனுபவம் ஆழ்ந்த சிந்தனைக்குரியது. அதை ஏற்றுக் கொண்டு மனம் மகிழ்ந்ததாகச் சொல்லுகிருர் கவிஞர். ஏதோ ஒரு பூவையோ, புத்தகத்தையோ, குழந்தையையோ கொண்டுவந்து கையில் கொடுப்பதுபோலக் கவிதையையும் கொடுக்கிருளாம் கலைமகள். இப்படி ஏற்றுக்கொண்ட முதலாவது கவிதையைக் கன்னிக் கவிதை' என்ருர். இந்த மகிழ்ச்சி வெறி தலைக்கேறி விட்டது. கவிதை முற்றும் வசமாகி விட்டதாகத் தோன்றுகிறது. அதனுல்தான் 'அடி!' என்று தோழமை பேசுகிருர். கவிதைக் காதலியின் காதல் கிடைத்து விட்டதாகவே நம்புகிருர்.

'என்னே டிணங்கி மணம்புரிவாய்' என்று போற்று கிருர். அவள் காலில் விழுகிருர். அப்போதே இளம் புன்னகை பூத்த வதனம் மறைந்து விடுகிறது. எனக்குக் கிடைத்தது இளம் புன்னகைதான்; மணமாலையல்ல! என்ற ஏக்கம்தான் மிஞ்சுகிறது.

பாரதியாரின் அந்தக் கன்னிக் கவிதை எது? இந்த இரகசியம் இன்னும் வெளிப்படுவதற்கில்லை. ஏக்கமோ ஒரு கனத்தில் மறைந்து விடுகிறது. சித்தத்தில் தளர்ச்சியில்லை. நம்பிக்கை விருப்பத்தைத் தூண்டிய வண்ணமாக இருக்கிறது. காதலன் பித்துப் பிடித்தது போலத் திரிகிறான்—ஆம் கவிதைக் காதலன்தான்! பகல் எல்லாம் அவள் பேச்சேதான்; இரவிலே அவள் கனவுதான். இப்படிக் கழிந்தன இருபத்திரண்டாண்டுகள் என்கிறார். இவர் வாழ்ந்ததெல்லாம் முப்பத்தொன்பது வயதுதான். இவ்வயதில் பாதிக்கு மேல் கழிந்துவிடுகிறது கலைமகள் காதலிலேயே.

இந்த அனுபவமும் பாட்டாக வந்திருக்கிறது. இத்தகைய செய்திகளைத்தான் வாழ்க்கை வரலாற்றில் பார்க்க முடியாதே; தற்சரிதைத் துணுக்குகளாகிய பாடல்களில்தானே பார்க்க முடியும். இதோ பாருங்கள் இந்த வாழ்க்கை அனுபவத்தை இந்தக் கண்ணாடியிலே;

**சித்தம் தளர்ந்ததுண்டோ?—கலைத்**
**தேவியின் மீது விருப்பம் வளர்ந்தொரு**
**பித்துப் பிடித்ததுபோல்—பகற்**
**பேச்சும் இரவிற் கனவும் அவளிடை**
**வைத்த நினை வையல்லால்—பிற**
**வாஞ்சை யுண்டோ? வய தங்ஙன மேயிரு**
**பத்திரண் டாமளவும்—வெள்ளைப்**
**பண்மகள் காதலைப் பற்றிநின் றேன் அம்மா!**

இந்த இருபத்திரண்டு வயதிற்குள்ளேதான் எத்தனை வாழ்க்கைச் செய்திகள்! பதினான்காம்வயதில் இந்தப் பாரதியார் ஏழுவயதுச் சிறுமியான செல்லம்மாளை மணந்து கொள்கிறார்—ஆம் புரட்சிகரமான சீர்திருத்தக்காரராய் வளரப்போகும் இவர். கலியாணப் பந்தலில் காதலியா இவரை வசிகரித்தாள்? கேளிக்கைகள், திருமண விநோதங்

கள் இவர் கவனத்தை ஈர்த்து உற்சாக மூட்டினவாம். ஓராண்டுக்குப் பின் தந்தையார்—நோய்வாய்ப் பட்டிருந் தவர்—திடீரென்று மரணமடைந்தார்; சொத்துக்களை இழந்து அந்த அதிர்ச்சியால் மறைந்தார். ஒரே வறுமை இருள் இந்தக் கவிதைக் காதலரைச் சூழ்ந்து கொண்டது.

வடநாட்டில் காசியில் வாழ்ந்த அத்தை அவரை அழைத்து வைத்துக்கொண்டு ஆதரித்தாள். அங்கே ஹிந்தி, வடமொழி முதலிய மொழிகளைக் கற்றுக் கொண்டார். சர்வகலாசாலைப் பிரவேசப் பரீட்சையில் தேறினார். மேல் படிப்புக்குப் போகவில்லை. அப்போது எட்டையபுரத்து ஜமீன்தாரின் அழைப்பு வந்தது. தமது இருபதாவது வயதில் பாரதியார் எட்டையபுரம் திரும்பினார். அதுவரை பிறந் தகத்திலே இருந்த மனைவியையும் அழைத்துக்கொண்டார். இந்த நிலையில் தமிழில் உள்ள பல நல்ல நூல்களையும் கற்க வசதி கிடைத்தது; புலவர்களோடு ஆராய்ச்சிகள் செய்ய வும் வாதங்கள் செய்யவும் வாய்ப்பு ஏற்பட்டது. அதே சமயம் ஆங்கில இலக்கியத்தையும் ஆய்ந்து வந்தார்.

எட்டையபுரத்தில் இரண்டே ஆண்டுகள் தங்கிய பின் மதுரை சென்று தமிழாசிரியர் பதவியை மூன்று மாதங்கள் வகித்து, அதையும் உதறிவிட்டுச் சென்னை சென்று 'சுதேச மித்திரன்' பத்திரிக்கையின் உதவிஆசிரியராக அமர்ந்தார். அப்போது மித்திரன்பத்திராதிபர் ஜி. சுப்பிரமணியஅய்யர். இதற்குள் தேசீய உணர்ச்சி பாரதியாரை ஆட்கொள்ளத் தொடங்கிவிட்டது. இதற்கிடையே குடும்ப வாழ்க்கையை முன்னிட்டுப் பொருள்தேட வேண்டும் என்ற விருப்பம் ஏற் பட்டது. லட்சுமியை உபாசிக்கத் தொடங்குகிறார் கவிஞர். சரஸ்வதி காதலையும் லட்சுமி காதல் மறைத்துவிடுமோ என்று தோன்றுகிறது. இந்தக் காதலையும் எவ்வளவு அதிசயமாக வருணிக்கிறார் பாருங்கள்!

இந்த நிலையினிலே—அங்கோர்

இன்பப் பொழிலி னிடையினில் வேருெரு

சுந்தரி வந்துநின்ருள்—அவள்

சோதி முகத்தின் அழகினைக் கண்டென்றன்

சிந்தை திறைகொடுத்தேன்—அவள்

செந்திரு வென்று பெயர்சொல்லி ஞள்;மற்றும்

அந்தத் தினமுதலா—நெஞ்சம்

ஆரத் தழுவிட வேண்டுகின் றேன், அம்மா!

சோலையில் காதலியைக் காதலன் சந்திப்பதாகத்தானே பெரும்பாலும் பழம் புலவர்கள் வருணிக்கிருர்கள். பாரதி யாரும் ஓர் இன்பப் பொழிலிடையே, செந்திரு என்ற சுந்தரி யைச் சந்தித்தாராம். அந்த ஜோதி முகம் கண்டதும் ஒரே மோகம் பொங்கிவிட்டது என்கிருர். மித்திரன் பத்திரா திபர் கொடுத்துவந்த அந்தச் சம்பளம் செலவுக்குக் காண வில்லை என்பது குறிப்பு. அன்பை அள்ளிக் கொடுத்தவர் போதுமான பொருளைக் கொடுப்பதற்கு வசதி பெற்றிருக்க வில்லை. அந்தக் காலத்திலே பத்திரிகைத் தொழில் தக்க வருவாய் உள்ள ஒரு பெருந்தொழிலாகிவிடவில்லை. எனவே பாரதியாருக்குச் செந்திருவின் காதல் கொடுத்துவைக்க வில்லை. கிடைத்தது புன்னகைதான்; அந்தப் புன்னகை யிலேயே அன்று முழுவதும் மகிழ்ந்து போவாராம்.

சொற்பப் பணம் கிடைப்பதை 'லட்சுமி புன்னகை செய்கிருள் என்று கூறுகிருர். கொஞ்சம் அதிகமாகப் பணம் கிடைப்பதும் உண்டு, இவர் கவிதைகளையும் கட்டுரைகளை பாராட்டுவோர் வாயிலாக. அந்த நிலையில் லட்சுமி சற்றுத் தன் முன்னே நின்று தன்னைக் குளிர நோக்குவதாகக் கற்பனை செய்து கொள்வார். அந்தப் பார்வையிலே அவள் காதலையும் கண்டுகொள்வார். அந்த மோக வெறியிலே தலை சுற்றும் என்றும் ஒப்புக்கொள்ளுகிருர். ஆனல் அப்படிக்

கொஞ்சம் முன்னின்று பார்த்தவள் மறுபடியும் முகம் காட்டவே இல்லையாம். 'என்ன பிழைகள் கண்டாளோ? என்னைப் புறக்கணித்துப் போய்விட்டாளே' என்று நொந்து போகிறது உள்ளம்.

இத்தகைய பொருட் கவலைகளையும் மயக்கங்களையும் ஆசைகளையும் ஆசை முறிவுகளையும் எவ்வளவு அழகாய்ச் சித்தரிக்கிறது பின்வரும் லட்சுமி காதல் பாட்டு:

புன்னகை செய்திடுவாள்—அற்றைப்
போது முழுதும் மகிழ்ந்திருப்பேன்; சற்றென்
முன்னின்று பார்த்திடுவாள்—அந்த
மோகத்தி லேதலை சுற்றிடுங் காண்; பின்னர்
என்ன பிழைகள் கண்டோ—அவள்
என்னைப் புறக்கணித் தேகிடு வாள்; அங்கு
சின்னமும் பின்னமுமா—மனஞ்
சிந்தி யுளமிக நொந்திடு வேன், அம்மா!

செந்திரு பொன்வடிவிலும் பொருள் வடிவிலும் போதுமான அளவிற்கு அருள் புரியவில்லை என்பது உண்மைதான். ஆனால் இவர் எப்படியெல்லாம் தம் லட்சுமி காதலைத் திருப்தி செய்துகொண்டார். கவியுள்ளம் அல்லவா! பொன்னுக்கு மேல் இலையையும் பூவையும் பெரிதென மதிக்கும் குழந்தையுள்ளமல்லவா! எனவே, இயற்கை அழகுகளில் கொட்டிக் கிடக்கும் செல்வங்களைக் கண்டுகளிக்கிறது பாரதியுள்ளம். 'காட்டு வழிகளிலே அழகுத் தெய்வம் தன் செல்வத்தைக் கொட்டியும் பரப்பியும் வைத்திருக்கிறது' என்கிறார். மலைக் காட்சிகளிலும் மலையருவிகளிலும் நாட்டுப் புறங்களிலும் இயற்கைச் செல்வங்களைக் கண்டு மகிழ்கிறார்.

நகரங்களிலும் அழகுச்சுவை தோன்ற அமைக்கப்பெற்றிருக்கும் மாடங்களையும் கலைச்செல்வமாகக் கண்டு இன்புறு

கின்றார். இப்படியெல்லாம் சொல்லிவிட்டுச் செல்வத் திருமகளை வேடர்கள், வீரர்கள்—வேந்தர்களிடத்திலும் கண்டதாகச் சொல்லுகிறார். இந்த விந்தைக் கருத்துக்களை அறிவிக்கும் பாட்டையும் நாம் இப்போது நோக்க வேண்டியதுதான்:

**காட்டு வழிகளிலே—மலைக்**
**காட்சியிலே, புனல் வீழ்ச்சியிலே, பல**
**நாட்டுப் புறங்களிலே—நகர்**
**நண்ணு சிலசுடர் மாடத்திலே, சில**
**வேட்டுவர் சார்பினிலே,—சில**
**வீரரிடத்திலும், வேந்தரிடத்திலும்,**
**மீட்டும் அவள் வருவாள்—கண்ட**
**விந்தையிலேஇன்பம் மேற்கொண்டுபோம்அம்மா!**

இங்கே குறிக்கப்படும் வேட்டுவர் யார்? வீரர் யார்? வேந்தர் யார்? செல்வத்தைப் பரம்பரையாகத் தங்கள் உழைப்பில்லாமல் பெற்றுவந்திருக்கும் குறுநில மன்னர்களையும் சுதேச மன்னர்களையும் குறிப்பிடுகிறாரா வேந்தர் என்று? நெஞ்சுத் துணிவுடன் வாணிப உலகில் செயற்கருஞ் செயல்கள் புரிந்து தங்களை வணிக மன்னர் ஆக்கிக்கொள்வோரைத் தான் வீரர் என்கிறாரா? இது போகட்டும்; அந்தச் சில வேட்டுவர் யார்? மிருகங்களை ஈவிரக்கமில்லாமல் வேட்டையாடுவோரைப்போல், மனித இரத்தத்தை இரத்தினமாக்கிக்கொள்ளும் பண வேட்டைக்காரர்களையா குறிப்பிடுகிறார். திட்டமாக ஒன்றும் சொல்வதற்கில்லை. லட்சுமி தேவியின் விந்தைக் கூத்துகளைக் கண்டு இன்பம் மேற்கொள்ளும் கவியுள்ளம் பேசுகிறது என்பதைத்தான் நாம் நிச்சயமாக அறிகிறோம்.

இந்த நிலையைக் கவியுள்ளம் பெற்றதோ, இல்லையோ! தேசிய உணர்ச்சி வெகு விரைவில் இவரை மேற்கொண்டு

விடுகிறது. 1906-ல் காசியில் காங்கிரஸ் கூட்டம் நடைபெற்றது. பாரதி போயிருந்தார். தலைமை தாங்கிய தாதாபாய் நௌரோஜி சுயராஜ்யம் என்ற சொல்லை உபயோகித்து விடுகிறார். அதை மந்திரமாக ஏற்றுக் கொள்ளுகிறது பாரதி உள்ளம். புரட்சிகரமான புத்துணர்ச்சிகள் பெற்றுவிடுகிறது. தேசமெங்கும் விடுதலை முழக்கம் கேட்கிறது. அந்நிய அரசின் அடக்குமுறை வலுக்கிறது. பாரதியாருக்குக் காளி பிரத்தியட்சமாகிறாள். அவள் யார் பராசக்தியா? பாரத சக்தியா?

**பின்னோர் இரவினிலே—கரும்**
**பெண்மை யழகொன்று வந்தது கண்முன்பு;**
**கன்னி வடிவமென்றே—களி**
**கண்டு சற்றேயரு கிற்சென்று பார்க்கையில்**
**அன்னை வடிவமடா!—இவள்**
**ஆதி பராசக்தி தேவி யடா!—இவள்**
**இன்னருள் வேண்டுமடா! பின்னர்**
**யாவு முலகில் வசப்பட்டுப் போமடா!**

என்பது இவர் 'காளி காதலி'ல் முதலாவது பாட்டு.

இனி, இவருக்கு லட்சுமி காதலைப் பற்றியோ சரஸ்வதி காதலைப் பற்றியோ கவலை இல்லை. சக்தியம்மைக்குப் பணி செய்கிறவர்களே திருமகளும் கலைமகளும் என்பது சக்தி மதம். ஆகவே, காளியருளால் செல்வம் பொங்கும், அறிவு பொங்கும், நலம் பல பொங்கும் என்கிறார், இவளைத் தொழுவதே போதும் என்கிறார்:

**செல்வங்கள் பொங்கிவரும்;—நல்ல**
**தெள்ளறி வெய்தி நலம்பல சார்ந்திடும்;**
**அல்லும் பகலுமிங்கே—இவை**
**அத்தனை கோடிப் பொருளினுள்ளே நின்று**
**வில்லை யசைப்பவளை—இந்த**
**வேலை யனைத்தையும் செய்யும் வினைச்சியை,**
**தொல்லை தவிர்ப்பவளை—நித்தம்**
**தோத்திரம் பாடி தொழுதிடு வோமடா!**

இந்தத் தேவி பராசக்தியைத் தரிசித்ததும், பாரதியார் இவள் தொழுகையே தேசப் பணிதான் என்று துணிகிருர். இவள் 'கவிதையாவும் தனக்கெனக் கேட்கின்ருள்' என்கிருர். எனவே எளிய இனிய பாடல்களின் வாயிலாகத் தேசிய உணர்ச்சியை மக்களிடையே தூண்டிய வண்ணமாயிருந்தார் கொஞ்சகாலம். இப்படிச் சுதேசமித்திரன் மூலமாகத் தொண்டாற்றியபின் பராசக்திமீது அதிதீவிர பக்தி கொண்டவராய், அந்தச் சிந்தனைகளையும் உணர்ச்சிகளையும் தாராளமாக வெளியிட வேண்டுமென்று துணிந்து இந்தியா பத்திரிகை என்ற ஒரு புதிய பத்திரிகை வாயிலாகத் தொண்டாற்றத் தொடங்கினர். 1907ல் வெளிவரத் தொடங்கியது இந்த வாரப் பத்திரிகை. இதுவே பாரதியாரைத் தமிழகமெங்கும் நன்ருக அறிமுகப்படுத்தியது.

இப்பத்திரிகையில் இவர் எழுதுகிருரா, பேசுகிருரா? என்று வியக்குமாறு இவர் எழுதிவந்தார் பாடிவந்தார். கேலிச் சித்திரங்கள் மூலமாகவும் பேசி வந்தார். ஓர் இரவில் கண்ட 'கரும் பெண்மையழகு' இவரை சும்மா விட்டுவைக்கவில்லை. 'தொல்லை தவிர்ப்பவள்' என்று இவர் கருதிய தெய்வம் தொல்லை கொடுத்தவண்ணமாயிருந்தது. ஒரு சமயம் இத்தொண்டரை நோக்கி, "நீ என் தூதன்" என்றது. அன்னிய அரசின் அடக்கு முறையும் அதிகார மிடுக்கும் ஒருபுறம்; அடிமை மக்களின் அச்சமும் அறியாமையும் வறுமையும் ஒருபுறம்—'இந்த அசுரர்களுக்கிடையே நீ என் கோப முரசாக முழங்க வேண்டும்!' என்கிருள் காளி. அன்னைக்கும் கோபமா? ஆம் தர்மாவேசம்தாம் இவள் கோபம்! 'இடிக் குரலில் முரசு பேச வேண்டும்; அன்புக் குரலிலும்தான்!' என்று கர்ச்சிக்கிருள் காளி, சிங்கவாகனத்தின்மீது அமர்ந்த வண்ணம்.—

இந்தியா பத்திரிகை தேசியப் பிரசாரத்தில் மும்முரமாக ஈடுபட்டது. வடஇந்தியாவில் தேச பக்தர்களான லஜபதிராய், விபினசந்திரபாலர் முதலானவர்கள் சிறை

புகுந்தனர். அரசியல் உலகில் இவர்களை அமிதவாதிகள் என்றும்—தேசநேசத்துடன் ராஜபக்தியையும், இணைத்துக் கொண்டிருந்தவர்களை மிதவாதிகள் என்றும் சொல்லிக் கொண்டிருந்த காலம் அது. அக்காலத்தில் கூடியது சூரத் காங்கிரஸ். தமிழ்நாட்டிலிருந்து பாரதியாரும், வ. உ. சிதம்பரம் பிள்ளை முதலானவர்களும் போயிருந்தார்கள். காங்கிரஸில் பிளவு ஏற்பட்டது. அதி தீவிரவாதிகள் திலகர் தலைமையில் மிதவாதிகளை முறியடித்து விட்டார்கள் சூரத் போரிலே! என்று சீறிக்கொக்கரித்தன அன்னிய ஆட்சியை ஆதரித்த பத்திரிகைகள். பாரதியாரும் வ. உ. சி.யும் புரட்சிகரமாகத் தேசப்பணி ஆற்றவேண்டும் அதிதீவிர வாதத்தைப் பரப்பவேண்டும் என்ற கொள்கையுடன் தமிழகத்திற்குத் திரும்பி வந்தார்கள்.

தேசியக் கிளர்ச்சி ஒரு தனிப்பெரும் கிளர்ச்சி ஆயிற்று. ஒரே கொந்தளிப்பு, தமிழகத்தின் பகுதிகளில் வ.உ.சி.யை யும் சுப்பிரமணிய சிவத்தையும் ராஜநிந்தனை குற்றத்திற் காக அன்னிய அரசு கைது செய்தது. இந்த நிகழ்ச்சியை ஒட்டித் திருநெல்வேலியில் ஒரு கலகம் நடந்தது. இந்தியா பத்திரிகையின் நிர்வாகிகள் மீதும் ராஜநிந்தனைக் குற்றம் சாட்டினார்கள். ஆசிரியரான பாரதியார் மேலும் 'வாரண்ட்' பிறந்திருப்பதாகத் தெரியவந்தது. பாரதி புதுவையில் அடைக்கலம் புகுந்தார். 1908ம் ஆண்டில், அங்கும் இரகசியப்போலீஸ்காரரின் தொந்தரவுக்குக் குறை வில்லை. கண்ணன்—என் ஆண்டான் என்ற பாட்டில் இந்தத் தொல்லைகளைப் பின் வருமாறு குறிப்பிடுகிறார் பாரதியார்:

ஒன்பது வாயிற் குடிலினைச் சுற்றி
ஒரு சில பேய்கள் வந்தே
துன்பப் படுத்துது, மந்திரம் செய்து
தொலைத்திட வேண்டுமையே!
பகையாவுந்—தொலைத்திட வேண்டுமையே!

புதுவையில் பாரதியார் அனுபவித்த தொல்லைகள் ஒரு பாரதம்! ஆனால் அரவிந்தர், வே. சு. ஐயர் முதலான நண்பர்களின் கூட்டுறவு ஆறுதலளித்தது. இந்தியாபத்திரிகையும் புதுவையிலிருந்து வெளிவரலாயிற்று. ஆனால் 1909ல் இப் பத்திரிகை பிரிட்டிஷ் இந்தியாவில் வரக்கூடாதென்று தடை செய்து விட்டது. பிரிட்டிஷ் அரசாங்கம். அதனால் பத்திரிகை நின்றபின், வேறு இரண்டு பத்திரிகை முயற்சிகள் நடைபெற்று அவையும் ஓய்ந்துவிட்டன. வறுமையின் கொடுமையைப் பாரதியார் புதுவையில் அதிகமாகவே அனுபவித்தார். ஆனால் இங்கேதான் பாரதியாரின் கவித் திறன் உச்சநிலையை அடைந்தது. புதுவையில் புரட்சி விளைந்து கொண்டிருந்ததாக அன்னிய அரசினரும் இந்தியாவின் பொதுமக்களும்கூட நம்பி வந்தனர். ஆனால் புதுவையில் விளைந்த மகோன்னதமான புரட்சி பாரதியாருக்குக் கவிதை உலகிலே நிகழ்ந்த அற்புதவளர்ச்சிதான்! பராசக்தியின் பரிபூரண அருளும் பாரதியாருக்குப் புதுவையிலே கிடைத்தது என்று கூறுவது மிகையாகாது.

அலுத்துச் சலித்துப் போயிற்று புதுவை வாழ்வு. 'சிறைவாசத்தையும்விட மோசமானது இந்த வாழ்வு!' என்று கருதிய பாரதியார் ஒரு நாள் புதுவையை விட்டு திடீரென்று குடும்பத்துடன் புறப்பட்டார். பிரெஞ்சு எல்லையைத் தாண்டியதும் கடலூரில் கைது செய்யப்பட்டார். எனினும் இருபது தினங்களில் விடுதலை செய்யப்பட்டார். பிறகு தம் மனைவியின் ஊராகிய கடையத்தில் வாழ்ந்துகொண்டே மித்திரனுக்குக் கதைகளும் கட்டுரைகளும் எழுதி வந்தார்; திருநெல்வேலி நகருக்கும் இடையிடையே போய்த்திரும்பினார். இவரது அரசியல் கொள்கைகளும் சீர்திருத்தக் கொள்கைகளும் திருநெல்வேலி வாசிகளைப் பயமுறுத்தி விட்டன. 1920ஆம் ஆண்டில் குடும்பத்துடன் சென்னைக்கு வந்து 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் உதவி ஆசிரியராகச் சேர்ந்து கொண்டார். 1921ல் செப்டம்பர் மாதம் 11-ந் தேதி காலமானார்.

ஆனால் இவருக்கும் மரணம் உண்டா? பாரதி சக்தியுடன் இரண்டறக் கலந்த நிலையில் தம் கவிதையிலே நித்திய வாழ்வு வாழ்கின்றார் என்றே சொல்லவேண்டும். காலனைக் காலால் உதைப்பதற்காகப் பாடியவர் காலத்தைக் கடந்த குரலாக இன்றும் ஒலித்துக் கொண்டிருக்கிறார். சுதந்திரம் வருவதற்கு முன்பே இதைத் தீர்க்கதரிசனமாகக் கண்டு வெற்றிச் சங்கு ஊதியவர், இன்று ஒற்றுமைச் சங்கும் ஊதி மேலும் மேலும் வெற்றிகள் காணுமாறு நம்மைத் தூண்டிய வண்ணமாயிருக்கிறார். இவர் 'வா, வா' என்று அழைத்த பாரதம் இன்னும் வந்துவிடவில்லை. ஒளி படைத்த கண்களுடனும், உறுதிகொண்ட நெஞ்சுடனும் நாம் மேலும் அறப்போர் புரிந்து சுதந்திர இந்தியா தன்னை வலிமைகொண்ட இந்தியாவாகச் செய்து கொள்ளும்போது தான் பாரதியார் எதிர் நோக்கிய புதிய பாரதம் வந்து விட்டது என்று கருதமுடியும்.

பாரதியாரின் சமதரும சமுதாயம் இன்னும் விளைந்து விடவில்லை. இவருடைய தமிழன்பு என்ற வேரில் வளர்ந்து விளைந்த தரு இவர் கவிதை. இக்கற்பகத் தரு இவர் விரும்பிய புதிய பாரதத்தையும் புதிய சமுதாயத்தையும் நமக்கு அளிக்கும் தெய்வீகசக்தி பெற்றிருக்கிறது என்று நம்பலாம்.

'நற்றமிழை விதைத்து என் உள்ளத்தை நீ விளைத்தாய்!' என்று ஆண்டவனை நோக்கி ஆழ்வார் ஒருவர் முறையிட்டுக் கொண்டார். பாரதியார் உள்ளத்தில் பராசக்தியாகிய பாரதசக்தி தமிழை விதைத்துக் கவிதையை விளைவித்து நாட்டை வாழ்விக்க விரும்பினாள் என்றே சொல்லவேண்டும்; சக்தியின் சங்கற்பம் நிறைவேறித்தானே ஆகவேண்டும்.

# 3. அரும்பு, மலர், கனி

கல்வியாகிய ஒரு வித்து முளைத்தெழுந்ததாம். அது ஒரு கற்பக விருட்சமாகி அயோத்தி என்றும் பெயர் பெற்றதாம். அந்தக் கற்பக விருட்சத்தின் பல்வேறு கிளைகளும் கேள்விகள் அல்லது ஆராய்ச்சிகள். இந்தத் தருவில் எண்ணிறந்த கிளைகள் தோன்றினவாம். முதன்மையான கேள்விகள்; வலிமை வாய்ந்த ஆராய்ச்சி வகைகள். இத்தருவின் இலைகளே தவம்—அருந்தவம். இலைகளுக்கிடையே அரும்புகள் அரும்பின: அரும்புகளே அன்பு. அரும்பு மலர்ந்தது: அறமே மலர். கனி கனிந்தது; நிறைந்த நல்லின்ப வாழ்வே கனி. இப்படிக் கொம்பிலேகனிந்தகனியுடன் தோன்றும் கற்பகமே அயோத்தி என்று பாடுகிருன் கம்பன். பாரதியாரும் தமிழை விதைத்து அந்த ஆர்வத்தை வேராகக் கொண்டு கவிதையைக் கற்பகமாக வளர்த்துக் கொண்டார். இவர் வசன நூல்களும் எழுதியிருக்கிருர். ஆனால் கவிதையிலே தான் சிறப்பாக இவர் மேதையைப் பார்க்க முடிகிறது என்பது என் கருத்து. இவர் கவிதைகளில் ஏறக்குறைய முக்கியமானவை எல்லாம் இப்போது நமக்குக் கிடைத்திருக்கின்றன என்றே கருதிவிடலாம்.

இவர் பாடல்களில் கண்ணன் பாட்டையும் பாஞ்சாலி சபதத்தையும் குயில் பாட்டையும் முப்பெரு நூல்கள் என்று குறிப்பிடலாம். அன்னிய ஆதிக்கத்திலே 'நாடு இல்லை, வீடு இல்லை' என்ற உணர்ச்சியுடன் புதுவையிலிருந்து திரும்பிய கவிஞர் பெருமான், தாம் மூன்று வீடுகள் கட்டியிருப்பதாகக் கருதினர். இந்த வீடுகளே இம் முப்பெரும் பாட்டு! இப்பாடல்களில் இவரது கவிச்சிற்பத்திறனைக் காண்

கிறேம். இவர் மேதா விலாசத்தைப் பல கவிதைகளிலும் காண்கிறேம். இவர் வசன கவிதையும் எழுதியிருக்கிருர் என்பதையும் பாரதி—வாசகர்கள் நன்கு அறிவர்.

பாரதியாரின் பாடல்களில் தேசியப் பாடல்கள் உண்டு; தேசிய இயக்கப்பாடல்கள் உண்டு; தேசிய வீரர்களைப் பற்றிய திருப்புகழ்கள் உண்டு; தமிழ்நாட்டுத் திருப்புகழ்ப் பாடல்கள் உண்டு; பிறநாடுகளின் சுதந்திரம் பற்றிய பாடல்களும் உண்டு. இதை இவர் கவிதைகளின் முதற் பெரும்பகுதி எனலாம்; அடிப்படைப்பகுதி என்று கூறலாம். அடுத்தபடியாக இவரது பக்திப்பாடல்களையும் தத்துவப் பாடல்களையும் குறிப்பிடலாம். இதற்கும் அடுத்தபடியாக, பெண்மைப் பாடல்கள், சரிதப்பாடல்கள் சமுதாயப் பாடல்கள் முதலியவற்றைக் குறிப்பிடலாம். அப்பால் முப் பெரும் பாட்டையும், வசன கவிதையையும் குறிப்பிடலாம்.

பாரதியாரின் வசன நூல்களில் ஞானரதம் ஒருதனிச் சிறப்பு வாய்ந்தது. இது ஓர் அருமையான வசன காவியத் துணுக்கு. சந்திரிகை, கதைக்கொத்து முதலிய வசன நூல்களையும் குறிப்பிடவேண்டும். நவ தந்திரம், ஆறிலொரு பங்கு, என்ற இரண்டு வசனநூல்களும் முற்றுப் பெறவில்லை. பதஞ்சலி யோகசூத்திரங்களைப் பற்றிக் குறிக்கும் வேதரிஷிகளின் கவிதைகளைக் குறித்தும் பாரதியார் விளக்கமும் விமர்சனமும் எழுதியிருக்கிருர். கீதையை மொழி பெயர்த்திருக்கிருர். இவரது பிரசாரத்துணுக்குகளும் பல வெளி வந்திருக்கின்றன; வேறு கட்டுரைகளும் அச்சிடப் பட்டுள்ளன. இவற்றுள் 'தராசு' என்ற தலைப்புடன் வந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

இந்தியா முதலான பத்திரிகைகளில் பாரதியார் எழுதியிருந்தவற்றையும் தொகுத்து நூற்றுநாற்பது துணுக்குகளாக வெளியிட்டிருக்கிருர்கள். இவற்றுள் சில செய்யுளின் உருவிலும், பெரும்பாலானவை வசன உருவிலும் காணப்

படுகின்றன. இந்த வசனப்பகுதியில் குட்டிக் கதைகள், கட்டுரைகள் முதலியன உண்டு. பாரதியார் ஆங்கில மொழியிலும் துணுக்குகளும் கட்டுரைகளும் எழுதியிருக்கிறார். இவை 'அக்கினி முதலிய கட்டுரைகள்' என்ற தலைப்பில் வெளி வந்திருக்கின்றன. திரு கே. எஸ். வேங்கடரமணியும் டாக்டர் ஸி. ஆர். ரெட்டியும் சேர்ந்து இந்த ஆங்கில வெளியீட்டிற்கு ஓர் அழகான முகவுரை எழுதியிருக்கிறார்கள்.

பாரதியாரின் கவிதாசிகரத்தைத் தேசியப் பாடல்களில் காண்பதற்கில்லை; எனினும் என் உள்ளம் இவரைத் தேச பக்த மகாகவி என்றே போற்றுகிறது. தோத்திரப் பாடல்களிலும கண்ணன் பாட்டிலும் கூடத் தேசிய மணம் வீசக் காண்கிறோம். குயில் பாட்டு ஒன்றே அரசியல் கலப்பு ஒரு சிறிதும் இன்றி அமைந்திருப்பதாகத் தோன்றுகிறது. சுமார் 250 அடிகளில் அமைந்திருக்கும் இப்பாட்டும் வாழ்க்கையின் எல்லாப்பகுதிகளையும் குறித்த கருத்துக்களையும் கொள்கைகளையும் உய்த்துணர வைக்கத்தான் செய்கிறது.

பாரதியாருக்குத் தேசியமும் ஒருவகை மதம் தான். சமயம் வேறு அரசியல் வேறு என்று இவர் சுவர் போட்டுப் பிரித்து வைத்ததே கிடையாது. சமய உணர்ச்சியை அரசியலில் புகுத்தித் தேசியத்தைத் தம் சக்தி மதத்தின் இன்றியமையாத உயிர்நிலைப் பகுதியாகச் செய்து கொண்டுவிட்டார். தேசியத்தை மட்டுமா, அரசியல், பெரு நிகழ்ச்சிகளையும் கூடத் தம் சக்தி மதத்துடன் இணைத்துக் கொண்டார், இசைத்துக் கொண்டார் இவர். அதனால்தானே ருஷ்யப் புரட்சி குறித்தும் ஜார் சக்கவர்த்தியின் வீழ்ச்சி குறித்தும் பாடும்போது:

**மாகாளி பராசக்தி உருசியநாட்**
**டினில் கடைக்கண் வைத்தாள், ஆங்கே**
**ஆகாவென் றெழுந்தது பார் யுகப்புரட்சி;**
**கொடுங்கோலன் அலறி வீழ்ந்தான்.**

என்று பாடியிருக்கிறார்.

பாரதியின் புரட்சி மனப்பான்மையில் தெய்வ பக்திக்கும் இடம் உண்டு, சிறப்பாக காளிபக்திக்கு இடம் உண்டு. புரட்சிகளுக்கெல்லாம், சீர்திருத்தங்களுக்கெல்லாம் காளியை அதிதேவதையாக்கிப் பாடியிருக்கிறார் பாரதியார். பாஞ்சாலியைத் துரியோதனன் சபைக்கு இழுத்து வரச் சொன்னபோது ஏற்பட்ட அதர்மக் குழப்பம் பிரபஞ்ச மெங்கும் பரவி விட்டது என்று பாடும்போது பாரதியார் காளியைக் குறித்தும் பின் வருமாறு பாடுகிறார்:

வாலை, உமா தேவி, மாகாளி, வீறுடையாள்,
மூலமா சக்தி, ஒரு மூவிலைவேல் கையேற்றாள்,
மாயை தொலைக்கும் மஹாமாயை தானாவாள்,
பேயைக் கொலையைப் பிணக்குவையைக்
கண்டுவப்பாள்,
சிங்கத்தி லேறிச் சிரித்தெவையுங் காத்திடுவாள்,
நோவும் கொலையும் நுவலொணாப் பீடைகளும்
சாவும் சலிப்புமெனத் தான்பல் கணமுடையாள்,
கடாவெருமை ஏறுங் கருநிறத்துக் காலனார்
இடாது பணிசெய்ய இலங்குமஹாராணி,
மங்களம் செல்வம் வளர்வாழ்நாள் நற்கீர்த்தி
துங்கமுறு கல்வியெனச் சூழும் பலகணத்தாள்,
ஆக்கந் தானாவாள், அழிவுநிலை யாவாள்,
போக்கு வரவெய்தும் புதுமையெலாந் தானாவாள்,
மாறிமாறிப் பின்னும் மாறிமாறிப் பின்னும்
மாறிமா றிப்போம் வழக்கமே தானாவாள்;

ஆதி பராசக்தி.

பாரதியின் புரட்சி தெய்வம் இது. இக்காளி வர்ணனையைப் பாஞ்சாலி சபதத்தில் காண்கிறோம். இக்காளியே

கண்ணன் பாட்டில் கண்ணனுக வந்து காதலைக் கொள்ளை கொள்ளுகிருள், தேசியப் பாடல்களில் தோன்றி, 'தாயன்பு தா!' என்று கேட்கிருள். தோத்திரப் பாடல்களில், 'எந்த இஷ்ட தெய்வ வடிவிலும் நீ என்னைத்தான் வழிபடுகிருய் என்கிருள்; அந்த வணக்கங்களை, வழிபாடுகளை யெல்லாம் தானே கவர்ந்து கொள்கிருள் ஞானப்பாடல்களில், 'அறிவே தெய்வம்', என்று சொல்லி, 'அந்த அறிவும் நான் தான்' என்கிருள். பெண்மைப் பாடல்களில், 'தாய்க்குலம் என் குலம்தான்' என்கிருள். பகையை மாய்க்குமாறு கட்டளை யிடுகிருள்; பகைவனுக்கருள்வாய்!என்றும் சொல்லுகிருள்; 'பகைவன் உள்ளத்திலும் நானே இருக்கிறேன் என்றும் முழக்குகிருள். மழையாகக் கருணை புரியும் காளிதான் இடியாகவும் தன் ஆணையைப் புலப்படுத்துகிருள். காலை இளவெயிலும் காலை இளங்காற்றுமாய்' வீசும் காளிதான் கடும் புயலாகவும் கொடிய வெய்யிலாகவும் வீசுகிருள்.

இப்படியெல்லாம் பாரதியார் தம் சக்தி மதத்தை வெளியிட்டுக் கொண்டே போகிருர் பல்வேறு பாடல் களிலும். தேசியப் பாடல்களில் இதே காளிதான் தேச மாதாவாக வருகிருள். தேச அன்னைக்குக் கருணை முகமும் உண்டு; கோபமுகமும் உண்டு—தாய் முகமும் உண்டு; பேய் முகமும் உண்டு.

பேயவள் காண் எங்கள் அன்னை—பெரும்
பித்துடையாள் எங்கள் அன்னை
காயழல் ஏந்திய பித்தன்—தனைக்
காதலிப்பாள் எங்கள் அன்னை.

என்று இவர் பாடுவதைப் பாருங்கள்.

பாரதியாரின் பக்திப் பாடல்களிலும் தேசபக்தி ஊடுருவிக் கிடப்பதைக் காண்கிறோம். பாரதிக்குத் தேச பக்தி வேறு, தெய்வபக்தி வேறு என்பதில்லை; பக்தி வேறு

சக்தி வேறு என்பதும் இல்லை. தாயும் தாய்த்திரு நாடும் சொர்க்கத்திற்கும் மேல் என்ற கொள்கையை அப்படியே ஒப்புக்கொண்ட இவர் தாயின் விசுவரூபமாகவே தேச அன்னையையும் உலக அன்னையையும் காட்டுகிறார். இவருக்குக் கவிதை வேறு, மதம் வேறு என்பதுமில்லை; கவிதையே சமயம், சமயமே கவிதை என்று சொல்லும்படி இவ்விரண்டும் வாழ்க்கையில் ஒன்றுபட்டுக் கலந்திருந்தன.

பாரதியாரின் இசைக் கவிதையில் ஏறத்தாழ நாலில் ஒரு பங்கு தோத்திரப் பாடல்களாக அமைந்திருப்பதி லிருந்து, இவர் சமயப்பற்றை நன்றாக ஊகித்துக் கொள்ள லாம். இப்பாடல்களெல்லாம் கவிதைச் சிறப்பு வாய்ந்தது என்று சொல்ல முடியாது; எனினும் அங்குமிங்கும் மேதை சுடரக் காண்கிறோம், இப்பாடல்களிலும். இவை பெரும் பாலும் மரபை ஒட்டிய பாடல்களாகவும் இருக்கின்றன; எனினும் இவற்றில் 'புதுப்புதுப் புதுமைகள்' பொலிவதை யும் காண்கிறோம்.

பாரதியாரின் தோத்திரப் பாடல்களிலே அரவிந்த மேதையின் (யோகி அரவிந்தருடைய மேதையின்) சாயை படிந்திருப்பதையும் காண்கிறோம். வேதரிஷிகளின் கவிதை குறித்த அரவிந்தரின் கருத்துக்கள் பாரதியாரின் ஞானப் பூங்கோயிலுக்கு அரணாகவும் அகழியாகவும் அமைந்திருப் பதையும் காண்கிறோம். பாரதியாரின் பக்திப்பாடல்கள் சக்திவேதாந்தம் என்ற ஆழ்ந்தகன்ற அடிப்படையில் பெரும்பாலும் அமைந்திருப்பதையும் காண்கிறோம். இத்தோத்திரப் பாடல்களிலுள்ள காணும் கொள்கை களினூடே, மானுடப் பண்பு மணிகளைக் கோக்கும் ஒரு பொற்சரடு போல் ஊடுருவிக் கிடப்பதையும் காண்கிறோம்.

பக்திப் பாடல்களின் சிகரமாக நாம் கருதக்கூடிய கண்ணன் பாட்டு பாரதியாரின் முப்பெரும் பாட்டில் ஒன்றாக இருப்பதை நாம் ஏற்கனவே தெரிந்து கொண்டிருக்

கிறேம். இப்பாட்டை ஒரு தனிப் புத்தகமாக இருபத்து மூன்று கவிதைகளின் ஒரு தொகுப்பாக—1917ல் முதல் முதல் வெளியிட்டார்கள். இதற்கு வ. வே. சு. ஐயர் ஒரு முன்னுரை எழுதியிருக்கிருர்கள். அதை இலக்கிய உலகின் உயர்தர மன்றத் தீர்ப்புக்களில் ஒன்று என மதிக்கலாம். கண்ணன் காதலில் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள காதலையே நம் முன்னேர் கண்டு காட்டினர் என்பது தான் பாரதி கொள்கையும் வ.வே.சு. ஐயர் கருத்துமாகும். இக்காதலைப் புலப்படுத்துவதில் பாகவத புராணம்கூடச் சில சமயங்களில் வரம்பு மீறிப் போயிருக்கிறது என்பதை வ. வே. சு. ஐயர் சுட்டிக்காட்டுவதும் பொருத்தம்தான். பாரதியாரும் சிற்சில இடங்களில் தம் இலக்கியத் தராசு முளையைச் சரியாக நிறுத்த முடியாமல் தத்தளிப்பதை ஐயர் காட்டுவதும் பொருத்தம்தான் என்றே எனக்குத் தோன்று கிறது.

கண்ணனைத் தோழனுகவும், தாயாகவும் தந்தை யாகவும், சேவகனுகவும் அரசனுகவும் சீடனுகவும் குருவாக வும் குழந்தையாகவும் விளையாட்டுப் பிள்ளையாகவும் ஆண்டானுகவும் குலதெய்வமாகவும் காட்டும்போதெல் லாம் இடர்ப்பாட்டுக்கு இடமே இல்லை. காதலனுகவும், காதலியாகவும் சிங்கார ரசம் தோன்றக் காட்டும் முயற்சி யிலேதான் சற்றுத் தடுமாற்றம் வந்து விடுகிறது. உலக இலக்கியங்களில் 'சாலமன் கீதம்' போன்றவற்றைச் சுட்டிக் காட்டிச் சமாதானம் கூறுவார் உண்டு. ஆனுல்,

**வாலைக் குமரி அடி—கண்ணம்மா!**
**மருவக் காதல் கொண்டேன்**

என்று காதலியின் காட்சி வியப்பில் வருவதும், காதலியின் முகத்திரை களைதல் என்ற தலைப்பில்,

**காரியம் இல்லையடி வீண் பசப்பிலே—கனி**
**கண்டவன் தோல் உரிக்கக் காத்தி ருப்பனே?**

என்று வருவதும் சற்றுக் கவிதா ரசத்தின் வரம்பை மீறுவன என்றே நான் கருதுகிறேன்.

இந்தக் கண்ணன் பாட்டிலும் பாரதியாரின் தேசீய உணர்ச்சியின் ஒரு தத்துவ சிகரத்தைக் காணத்தான் செய்கிறோம். கண்ணன்—என் அரசன் என்ற பாட்டில் புலனுகிறது இந்த 'எவரஸ்ட்' சிகரம். அடக்கு முறைக்குமேல் அடக்குமுறையாகக் கொடுங்கோல் ஆதிக்கம் அநீதி செலுத்தி அரசு புரியும்போது கடவுள் ஏன் தலையிடவில்லை? என்ற கேள்வி பக்தர் மனத்திலும் எழக்கூடியதுதான். 'அரசன் அன்று கொல்வான்' தெய்வம் நின்று கொல்லும்' என்ற சாதாரணப் பழமொழியின் உட்பொருளைப் பலரும் புரிந்து கொள்வதில்லை. தெய்வத்தின் வழிகள் அற்புதமானவை, மிகமிகப் பொறுமையானவை—என்கிறார் பாரதியார். ஆனால் 'தெய்வமும் பொறுமை இழந்தது. தருமமும் சலித்துப் போயிற்று என்று சொல்லக்கூடிய நிலையில் கொடுமை அதிகரிக்கும்போது தெய்வசக்தி எப்படிப் புரட்சியை விளைவித்து விடுகிறது என்பதைப் பாரதியார் சுட்டிக் காட்டுகிறார்.

பகைமை முற்றி முதிரும் வரை கண்ணன் பொறுத்துப் பொறுத்து ஒதுங்கியிருப்பதுடன் சிரித்துக் கொண்டுமிருக்கிறுனும். கண்ணன் வென்று பகைமை அழியும் காலத்தையும் காணப்போகிறோமோ என்று பக்தியுள்ளமும் சலித்துப் போகக் கூடுமாம். ஆனால் காலம் வந்து கைகூடியதும் கண்ணன் புரட்சி ரூபம் எடுத்து விடுகிறுனும். புரட்சியின் விசுவரூபத்தை பாரதியார் காட்டத் தொடங்குகிறார் 'கண்ணன்—என் அரசன்' என்ற பாட்டிலே:

**காலம் வந்துகை கூடும்அப் போதில்ஓர்**
**கணத்திலே புதிதாக விளங்குவான்;**
**ஆலகால விடத்தினைப் போலவே**
**அகிலமுற்றும் அசைந்திடச் சீறுவான்!**

இனிப் பொறுமைக்கோ, கருணைக்கோ சிறிதும் இடமில்லை. பகைமை அழிப்பது ஒன்றே குறி.

**வேரும் வேரடி மண்ணும் இலாமலே**
**வெந்துபோகப் பகைமை பொசுக்குவான்!**

என்று தெய்விகமாக ஏற்படும் புரட்சியையும் அதன் பயனை யும் பாரதியார் சுட்டிக் காட்டுகிறார். ஆனால் இந்த மறக் கருணையின் பயனும் முடிவில் கருணைதானும்.

**பாரும் வானமும் ஆயிரம் ஆண்டுகள்**
**பட்டதுன்பம் கணத்திடை மாற்றுவான்**

என்கிறாரல்லவா?

புராணக் கதையையும் பக்திக் கொள்கையையும் இப்படி வாழ்க்கையுடனும் அரசியலுடனும் பொருத்திக் காட்டிய கவிஞர் வேறு யாராவது நமது நாட்டில் இருந் திருக்க முடியுமா?

**சக்கரத்தை எடுப்பது ஒருகணம்;**
**தருமம் பாரில் தழைத்தல் மறுகணம்**

என்று கூறித் துஷ்ட அசுரர்களின் வதைகளெல்லாம் தரும வயலில் செய்யும் உழவுதான்! என்கிறாரே இப்படி எவராவது இதற்குமுன் புராணத்தில் புதைபொருள் கண்டதுண்டா? எனவே அன்னிய அரசு பாரதியாரின் தேசியப் பாடல்களில் தான் ராஜநிந்தனை காணவேண்டியிருந்தது என்பதில்லை!

பாஞ்சாலி சபதத்தைப் பாரதியார் இதிகாசத் துணுக் காக இயற்றினார் என்பதில் ஐயமில்லை. ஆனால் இதை இயற்றுமாறு இவரைத் தூண்டியதும் தேசிய உணர்ச்சி யாகத்தான் இருக்கவேண்டும். உரிமைகளை இழந்து உடமை களையும் இழந்துகொண்டே வந்த பாரத அன்னையின் நிலை தான் மகாபாரதத்தில் ஆடை குலைவுற்று நின்ற பாஞ்சாலி யின் நிலையும் என்பதைப் பாரதியாரின் அரசியல் கண் கண்டு பிடித்துவிட்டது! கண்ணன் அருளால் பாஞ்சாலி ஆடை

மேன்மேலும் வளரப்பெற்ற நிலை இவருக்கு முழுச் சுதந்திர மும் அடையப்போகும் வருங்கால இந்தியாவின் நிலையைத் தான் சுட்டிக் காட்டியிருக்க வேண்டும்.

உரிய உரியத் துகில் வளர்ந்ததாம், பொய்யர் துயரம் போல், புண்ணிய வாளர்புகழைப்போல் துகிலுரிந்த துச்சா தனன் அலுத்துச் சலித்து விழுந்துவிட்டான். அப்போது என்ன நடக்கிறது?—பாருங்கள்.

**தேவர்கள் பூச்சொரிந் தார்—'ஓம்**
**ஜெயஜெய பாரத சக்தி' என்றே**
**ஆவலோ டெழுந்து நின்று—முன்னை**
**ஆரிய வீட்டுமன் கைதொழு தான்**
**சாவடி மறவரெல் லாம்—'ஓம்**
**சக்திசக்தி சக்தி' என்று கரங்குவித் தார்**
**காவலின் நெறிபிழைத் தான்—கொடி**
**கடிஅர வுடையவன் தலைகவிழ்ந் தான்.**

மகாபாரதக் காட்சியா? அல்லது சுதந்திர உதயம் கண்ட புதிய பாரதத்தின் காட்சிதானா? துரியோதன ராஜ சபையிலிருந்த அரசர்களைத்தான் 'சாவடி மறவர்' என்கிறார் பாரதியார். இந்தியா சுதந்திரம் பெற்ற காலத் தில் இந்தச் சொற்றொடர் சத்தியாக்கிரக அஹிம்சை நெறி யில் வெற்றி பெற்ற இந்தியாவை ஒரு புதிய சக்தியாக வர வேற்ற உலகநாடுகளைக் குறித்திருக்க வேண்டும். தலை கவிழ்ந்த துரியோதனன் அன்னிய ஆதிக்கம் கவிழ்ந்து போகும் என்பதைப் பாரதியாருக்கு நினைவூட்டினான் என்று கருதுவதிலும் தவறில்லை. இது சரியானால், கை தொழுத பீஷ்மன் தேசபக்தன்தான்—பழமை விரும்பி, மிதவாதி; எனினும் தேசபக்தன்தான்.

விதுரனையும் ஒரு தேசபக்தனாகவே காட்டுகிறார் பாரதி யார். விதுரன் ஞானியாகவும், மிகவும் நல்லவனாகவும்

கிருஷ்ண பக்தனுகவும் வருகிருன் பாரதத்திலே. இவனைப் பரம பாகவதருள் ஒருவனுக்கியது பாகவத சமயமாகிய வைணவம். பாரதியாரோ விதுரனை உத்தம தேசபக்தனு கவும் காட்டுகிருர். திருதராஷ்டிரன் விதுரனைத் தூதுவிட விரும்பி அழைத்துச் செய்தி சொன்னதும்,

**'போச்சுது! போச்சுது! பாரத நாடு!**
**போச்சுது நல்லறம்! போச்சுது வேதம்!'**

என்று பெரிதும் வருந்துகிருன் விதுரன்.

இப்போது நாம் பாஞ்சாலி சபதததிலும் தேசீய உணர்ச்சி ஊடுருவிக் கிடப்பதை உணர்ந்து கொள்ளக் கூடுமல்லவா? இத்தகைய இதிகாசத்துனுக்கு முழுவடிவில் 1924ம் ஆண்டில் பிரசுரிக்கப்பட்டது. பாரதியார் இதற்குத் தாம் எழுதிய முகவுரையில் எளிய நடையில் பொதுமக்கள் விரும்பும் யாப்புடன் மறுமலர்ச்சிக்கவிதை தோன்றவேண்டு மென்ற தம் கொள்கையை வற்புறுத்தியுள்ளார். தமிழுக்குப் புத்துயிர் அளிப்பதற்கு இதுவே வழி என்று கருதினுர். தமிழ்மக்களுக்குப் பழைய இதிகாச பாணியில் புதிய தேசீய ஆவேசத்தையும் புதுப்புதுச் சிந்தனைகளையும் ஊட்டவேண்டு மென்றும் ஆசைப்பட்டார். பாரதியார் தமது அடிப்படை நோக்கத்தில் வெற்றி பெற்றுவிட்டார் என்பதற்கு இந்த நூலின் சிறந்த பகுதிகளெல்லாம் சாட்சி சொல்லுகின்றன.

கடைசியாகக் குயில் பாட்டைப் பற்றியும் பிரஸ் தாபிக்கவேண்டும். பாரதியாரின் முப்பெரும் பாடல்களில் இதுவே மிகச் சிறந்தது என்று கருதுவோரும் உண்டு. 1923-ம் ஆண்டில் இது பாரதியாரின் தொகுப்பு நூல்களின் மூன்றும் பகுதியில் வெளியிடப்பட்டது. விலங்குகளையும் பறவைகளையும் கதாபாத்திரங்களாகக் கொண்ட ஒரு சிந்தைச் சிறுகாப்பியம் இது. ஏதோ ஒரு பொன்யுகத்தின் ஆடம்பரமற்ற, எளிமையும் எழிலும் நிறைந்த,

வாழ்க்கைக்கு இது நம்மை அழைத்துச் செல்கிறது. நகைச் சுவை முதலான சுவைகளுடன் இந்தக் காதற்கதை மலர்ச்சி பெறுவதைக் காண்கிருேம். இயற்கையழகு நிறைந்த காட்சி களில் கதை உருவாவதையும் காண்கிருேம். புராணம் மந்திரம் பாட்டு என்ற மூன்று தன்மைகளும் கலந்து அந்தி மாலையின் அழகுகளுடனும் மயக்கங்களுடனும் ஒன்றுபட்டுத் திகழ்வதைக் காண்கிருேம்.

ஷேக்ஸ்பியர் என்ற ஆங்கிலக் கவிச் சக்கரவர்த்தியின் 'நடுவேனில் இராக்கனவு' என்ற நாடகத்தை நினைவூட்டு கிறது குயில்பாட்டு. நாடகத்திறனோடு இதிகாசப் பெரு மிதத்தையும் இதில் காண்கிருேம். 'வேடர்வாராத விருந்துத் திருநாளில்' புதுவையில் ஒரு சோலையில் கதை நடக்கிறது. முழுக் கதையும் இக்கவிஞர் தம் வீட்டில் மாலை வேளையில் கண்டுகொண்ட ஒரு பகற்கனவுதான்! விழித்துப் பார்க்கையிலே,

**''சூழ்ந்திருக்குழ் பண்டைச் சுவடி எழுதுகோல்**
**பத்திரிகைக் கூட்டம், பழம்பாய்—வரிசையெல்லாம்**
**ஒத்திருக்க, நாம் வீட்டில் உள்ளோம்'' என உணர்ந்தேன்.**

என்கிருர்.

மாலையழகின் மயக்கத்தால் உள்ளத்தே தோன்றிய தோர் 'கற்பனை' எனத்தாம் கண்டுகொண்டதாகவும் கூறுகிருர் கவிஞர்.

**ஆன்ற தமிழ்ப்புலவீர்! கற்பனையே ஆனாலும்**
**வேதாந்த மாக விரித்துப் பொருள் உரைக்க**
**யாதானும் சற்றே இடமிருந்தால் கூறீரோ!**

என்று முற்றுப் பெறுகின்றது குயில்பாட்டு. ஆனால் இந்த வேதாந்தம் குறித்து நாம் கவலைப்பட வேண்டியதில்லை. உலக வாழ்க்கையின் தொல்லைகளிலிருந்தும் கவலைகளி

லிருந்தும் கவியுள்ளம் விடுதலை பெற்று ஆனந்தக் கடலாடு வதை இப்பாட்டில் காண்கிறோம். இந்த அனுபவம் ஒரு கணத்தில் நிகழ்ந்ததுதான்; ஆனால் இதன் நினைவு நித்திய இன்பம்தானே.

பாரதியாரின் குயில்பாட்டில்தான் அரசியல் நினைவோ தேசிய உணர்ச்சியோ இல்லை என்று கூறுவதுண்டு. தேசியத் தையும் குலுக்கித்தள்ளி விட்டு உடல் பிரிந்த உயிர் போலக் கவியுள்ளம் வேறொரு உலகத்திற்கே போய்விட்டது போன்ற உணர்ச்சிதான் வாசகர்களுக்கு ஏற்படுகிறது. தெய்வபக்தியிலிருந்தும் தேசபக்தியிலிருந்தும் காதல் தன்னை முற்றும் விடுவித்துக் கொண்டு ஒரு கதையாக வளர்ந்து செல்வதைத்தான் இங்கே காண்கிறோம்; 'காதலோ காதல்' என்று கதறுகிறது இதயம். குயிலும் மனிதனும் காதலிக் கிறார்கள்; குயிலும் குரங்கும் காதலிக்கின்றன. குயிலும் மாடும் காதலிக்கின்றன. குயில் தன் பூர்வ ஜன்மக்கதை சொல்கிறது; கடைசியாக மனிதப் பெண்ணாகக் காட்சி தருகிறது. அந்தப்பெண்ணின் 'விழியில் மிதந்த கவிதை' தன் சொல்லில் அகப்படவில்லை என்று ஒப்புக்கொள்கிறார் பாரதியார். எனினும் நமக்கு ஓர் அதிசயக்கவிதை—'இன்னிசைத் தீம்பாடல்' இசைந்திருக் கும் விந்தைக் கவிதை ஒன்று கிடைத்து விட்டது.

பாரதியாரின் வசன கவிதையிலும் கவித்திறனை ஓரளவு காணத்தான் செய்கிறோம். தாகூரின் வசனகவிதை இவருக் கும் வழிகாட்டியது என்றே சொல்லவேண்டும். வேதரிஷி களின் வாக்கைத் தம் வாக்கில் பிரதிபலிக்கச் செய்கிறார் பாரதியார். அவர்கள் இயற்கை மீது கொண்ட அந்த ஆதிக் காதலையும் படம்பிடித்துக் காட்ட முயல்கின்றார். பன்மை யில் ஒருமையைக் காட்டும் அந்த ஞானஒளியையும் காட்டப் பார்க்கிறார். தாகூரின் கீதாஞ்சலியில் இயற்கை யின் வாழ்வும் மனிதவாழ்வும் ஒருமித்துத் தெய்வபக்தி யுடன் ஒளிவிசக் காண்கிறோம். அத்தகைய சிறப்பியல்

பைப் பாரதியாரின் வசன கவிதையிலும் ஓரளவு காணலாம் என்றே தோன்றுகிறது.

*　　　*　　　*

பாரதியாரின் கவிதைகளையெல்லாம் கற்பகக் கனிகள் என்று சொல்லிவிட முடியாது. எந்தக் கவிஞனுடைய கவிதைகளும் உச்சநிலையிலேயே கனிந்து காணப்படும் என்று சொல்வதற்கில்லை. ஷேக்ஸ்பியர், கம்பன் முதலான உலகமகாகவிகளின் வாக்கிலும் ஏற்றத்தாழ்வுகளைக் காணத் தானே செய்கிறோம். எனவே பாரதியார் கவிதைகளிடையே சில கனிகளோடு மலர்களும் அரும்புகளும் காணப்படுகின்றன என்று கூறுவது ஒருபோதும் குறை கூறுவதாகாது.

பாரதியாரின் கவிதைக்கற்பகத்தின் கொம்பிலே கனிந்த முப்பெருங்கனிகள் கண்ணன் பாட்டும், பாஞ்சாலிசபதமும், குயில்பாட்டும் என்பது திண்ணம்.




# 4. தேசீயஒருமைப்பாடும் தெய்விகஒருமைப்பாடும்

உலகப் பொதுநலம் பேணும் பேரறிஞர்கள் உலக ஒருமைப்பாட்டை வற்புறுத்துகிறார்கள்; இந்த ஒருமைப் பாட்டை மக்கள் உள்ளங்களில் பதியவைத்துவிட்டால் எத்தனையோ பூசல்களுக்கும் கலகங்களுக்கும் இன்னல்களுக் கும் கவலைகளுக்கும் பரிகாரம் காணக்கூடிய வழி பலருக்கும் தென்படும் என்கிறார்கள். தேசநலம் பேணும் தேச பக்தர் கள் தேசிய ஒருமைப்பாட்டை வலியுறுத்துகிறார்கள்; இதைத் தேச மக்கள் உள்ளத்தில் பதியவைத்துவிட்டால், ஒரு தேசத்தை வாட்டும் பல துயரங்களுக்கும் பரிகாரம் காண்பது எளிது என்கிறார்கள். பக்தமணிகளே—முக்கிய மாக நம் பாரதநாட்டுப் பக்தமணிகள்—ஆன்ம நேய ஒருமைப்பாடு என்ற தெய்விக ஒருமைப்பாட்டை ஊட்டு கிறார்கள்; இந்த நினைப்பிலே மக்களிடையே சகோதர தர்ம உணர்வு தழைப்பதுடன், மதக் கொள்கைகளுக்கிடையே இத்தகைய உணர்வு தழைப்பதும் சாத்தியமாகும் என்கிறார் கள். இம் மூவகை ஒருமைப்பாடுகளிலும் பாரதியாருக்குப் பெரு நம்பிக்கையுண்டு.

புதுவையில் பாரதியாருடன் கடல்போன்ற ஞானம் வாய்ந்த அரவிந்தர் இருந்தார்; கம்பன் காவியப் பிரசாரத் திற்கு ஒரு மறுமலர்ச்சி ஏற்படுத்திய வ. வே. சு. ஐயரும் இருந்தார்; வேறு சில அறிஞர்களும் இருந்தார்கள். 'அந்தப் பேச்சிலே அமுதம் பெருக்கெடுத்தோடும். எரிமலை வெடித் தாற்போல் உணர்வு பிறிட்டெழும், அற்புதமான கற்பனை

மலர்கள் உதிரும். அத்தனையும் நாட்டைப் பற்றியதாகவே இருக்கும் என்று 7—9—62 தேதியிட்ட கிராம ராஜ்யத்தில் ஓர் அன்பர் எழுதியிருக்கிறார்.

பாரதியாருக்குத் தேசிய ஒருமைப்பாடு வேறு, உலக ஒருமைப்பாடு வேறு என்பதில்லை. 'வந்தே மாதரம் என்போம்' என்று தொடங்கும் தேசியப் பாட்டைத்தான் பாருங்கள். இதன் பல்லவியிலேயே உலக ஒருமைப்பாட்டுணர்ச்சியைக் காண்கிறோம்.

**வந்தே மாதரம் என்போம்—எங்கள்**
**மாநிலத் தாயை வணங்குதும் என்போம்**

என்பதுதானே பாட்டின் தொடக்கம். 'பாருக்குள்ளே நல்லநாடு' என்று பாரதியார் மதித்திருந்த பாரத நாடு பாருக்கெல்லாம் பிரதிநிதியாக உள்ள உயர் நாடுதான். பாரத அன்னையின் வெற்றி உலகத்திற்கே வெற்றி என்பதும் இவர் கொள்கை.

பாரதியார் புதுவையில் தம் துயரங்கள் பலவாயினும் அவற்றைத் தம் நாட்டுத் துயரங்களில் மறக்க முயன்றார். மக்களின் அடிமை வாழ்வைப் பற்றிய கவலை தம் சொந்த வறுமை வாழ்வைப் பற்றிய கவலைகளையும் வென்றுவிட்டது. இவர் சென்னையிலோ திருநெல்வேலி மாவட்டத்திலோ தங்கியபோதும், இதே மனப்பான்மைதான். இத்தகைய மனப்பான்மையின் விளைவுதான் 'நெஞ்சு பொறுக்குதிலையே' என்ற நொண்டிச் சிந்துப் பாடல்களாக விளைந்தது என்று கருதலாம்.

அன்னியர்களின் ஆதிக்கவெறி எவ்வளவு கோபம்மூட்டியதோ அவ்வளவு கோபமும் மூட்டியது பாரத மக்களின் அக்காலத்துக் கோழைத்தனமும்.

அஞ்சி அஞ்சிச் சாவார்—இவர்
அஞ்சாத பொருள் இல்லை அவனியிலே

என்ற வாக்கு எத்தகைய மனவேதனையில் பிறந்திருக்க வேண்டும்! அன்னிய அரசின்மீது மக்கள் கொண்டிருந்த ராஜ பக்தியைக் கண்டித்தவர் அத்தகைய பக்தி அன்பின் விளைவு அன்று, அச்சத்தின் விளைவுதான் என்பதை நன்குணர்ந்திருந்தார்.

வாரன்ஹேஸ்டிங்ஸ் என்ற கவர்னர் ஜெனரல்மீது இந்தியா தேசத்தைப் பாழாக்கிவிட்டதாக ஆங்கிலச் சீமையிலே குற்றம்சாட்டி விசாரணையும் நடத்தினார்கள். அப்போது, அந்தத் துரையின் சிலைக்குக் காசி மாநகரில் சில பார்ப்பனர் பாதபூஜை செய்ததாகச் சான்றும் கிடைத்ததாம். அந்தச் சான்றை வாரன்ஹேஸ்டிங்ஸ் கட்சிக்காரர் பயன்படுத்திக்கொள்ளப் பார்த்தனர். அதற்கு பர்க் என்ற வழக்கறிஞர் பதில் சொல்லும்போது, இந்துக்கள் அன்பால் தெய்வங்களை ஆராதிப்பதுபோல் துஷ்ட தேவதைகளையும் பயத்தினால் ஆராதிப்பதுண்டு என்றார். இத்தகைய பயபக்திதான் பிரிட்டிஷ் அரசின்மீது இந்திய மக்கள் கொண்டிருந்த ராஜபக்தியும் என்று கருதினார் பாரதியார். இக்கருத்துடன், பயபக்தியாகிய் ராஜபக்தியைக் கண்டித்ததுபோல் பயபக்தியாகிய மூடபக்தியையும் வெறுத்தார், பகைத்தார், அஞ்சாது கண்டித்தார்.

பேய்க்குப் பயந்தவர்கள் அன்னிய அரசாங்கத்தின் சிப்பாய்களையும் பேய்களாகக் கண்டு நடுங்குகிறார்களே என்று இவர் நெஞ்சு கொதித்தது. இப்படிப் பயப்படும் மக்கள் கூடிக் கலந்து தங்கள் துயரங்கள் குறித்து ஆலோசித்துப் பார்க்கிறார்களா என்றால், அதற்கும் பிரிவினைகள் இடம் கொடுக்கவில்லையே என்கிறார். கொஞ்சமோ பிரிவினைகள்! என்று கொதிக்கிறது நெஞ்சு. சாதிப் பிரிவினைகள் மட்டுமா. சமயப் பிரிவினைகளும் நெஞ்சகத்திலே பிரிவுகளை

ஏற்படுத்தியிருக்கின்றனவே என்கிறார். இப்படியெல்லாம் பரிதவித்த நெஞ்சு ஒருமைப்பாட்டின் நோய்க்கு மருந்து தேட முயன்ற வண்ணமாயிருந்தது.

மக்களைப் பிரித்துவைத்த குள்ள மதியைச் சபிக்கிறது இக் கவியுள்ளம்.

**சாதிநூறு சொல்லுவீர்,**
**போ போ போ!**

என்று துரத்துகிறது பிரிவினைச் சக்தியை. இந்த இந்தியச் சாதியை இணைப்பதெப்படி, ஒன்றுக்குவது எப்படி? என்பது பாரதியாரின் பகல் நினைவும் இராக் கனவுமாக இருந்தது. இவர்களிடையே ஒருமைப்பாட்டை வளர்ப்பதற்குத் தெய்விக ஒருமைப்பாட்டை நினைவூட்டுவது இன்றியமை யாததாகும் என்று நம்பினார்.

நம் மக்கள் தேசீய ஒருமைப்பாடு என்ற புதிய உணர்ச்சி பெறுவதற்குப் பண்டைப் பழைய வேதாந்தக் கொள்கை யும் உணர்ச்சியுமான தெய்விக ஒருமைப்பாடு அடிப்படை யாக உதவ வேண்டும் என்று தீர்மானித்தார் பாரதியார். தம் பாரத சமுதாய வாழ்த்துப் பாட்டினிடையே,

**எல்லா உயிர்களிலும் நானே யிருக்கிறேன்**
**என்றுரைத்தான் கண்ணபெருமான்;**
**எல்லாரும் அமரநிலை எய்தும்நன் முறையை**
**இந்தியா—உலகிற் களிக்கும்—ஆம்**
**இந்தியா உலகிற் களிக்கும்—ஆம் ஆம்**
**இந்தியா உலகிற் களிக்கும்—வாழ்க!**

என்று வருவதைக் காண்கிறோம்.

இந்தியா உலகிற்கு அளிக்கக்கூடிய தனிப் பெருஞ் செல்வமாகிய ஆன்மநேய ஒருமைப்பாடு என்ற அடிப்படை

யிலேதான் எல்லாரும் ஓர் குலம், எல்லாரும் ஓர் இனம், எல்லாரும் இந்திய மக்கள் என்ற தேசிய ஒருமைப்பாடும் நிலைபெற்று நிற்க வேண்டும் என்பது பாரதி சித்தாந்தம். இதுவே பாரத சித்தாந்தம் என்று ஊகிப்பதும் தவருகாது. உண்மையில் கோடிக்கணக்கான முகங்களும் பல மொழிகளும் உள்ள பாரத அன்னை ஒருயிரும் ஒரு சிந்தனையும் உடையவளாக இருப்பதற்கு வேறு எந்தக் காரணம்தாம் இருக்க முடியும்.

அறிவுக்கும் அப்பால், உணர்ச்சிக்கும் உள்ளத்திற்கும் அப்பால், 'அது இது' என்று விளக்க முடியாத, சுட்டிக் காட்ட முடியாத ஒரு சக்தி இருக்கிறது, அது எல்லாவற்றையும் நடத்தி வைக்கிறது, அது ஆதியாய் அநாதியாய் உள்ளது— என்பதை முதல் முதல் கண்டு கொண்டது வேத வேதாந்திகளான இந்திய முனிவர்களின் உள்ளம்தான், பாரதத்தின் ஞானம்தான். இவ்வுண்மையைப் பாரதியார் தம் காவடிச் சிந்துத்துணுக்கு ஒன்றில் 'மகா காளியின் புகழ்' என்ற தலைப்பில் வெளியிட்டிருக்கிருர்.

**காலமாம் வனத்தில் அண்டக்**
**கோலமாம் மரத்தின்மீது**
**காளி சக்தி என்ற பெயர்**
**கொண்டு—ரீங்**
**காரமிட்டு உலவும் ஒரு**
**வண்டு**

என்று அதிசயமாய்த் தொடங்குகிறது இப்பாட்டு. இதைக் கண்டு பேசியிருக்கிருர்கள் பழைய வேத முனிவர்கள் என்கிருர்.

இந்தக் காளி சக்தி ஆதியாய் அநாதியாய் அகண்ட அறிவாய் இருக்கிறதாம். இவளுக்கு அன்பு வடிவமும்

உண்டு, கோர வடிவமும் உண்டு; இன்ப வடிவமும் உண்டு; துன்ப வடிவமும் உண்டு. 'இவளே வீர சக்தி' என்று கருதுவதில் பாரதியாருக்கு ஒரு விசேஷ திருப்தி. இந்த வீரமகா சக்தியின் அம்சமாகிய பாரத சக்தி என்று குமரி முதல் இமயம் வரையுள்ள தேசத்தை வணங்கியது பாரதி உள்ளம். உணர்விழந்த மக்களுக்கு இந்த உணர்ச்சியை எழுப்புவதுதான் எப்படி?

பாரத அன்னைக்கு ஒரு வடிவம் வேண்டுமே என்று எண்ணிப்பார்த்த பாரதியார் ஒரு சமயம் ஓவியப் பேராசிரியர் ஒருவர் உதவியால் உருவம் ஒன்று சித்திரித்து வைத்துக்கொண்டு, அதைச் சிற்பி ஒருவர் உதவியால் சிலையுமாக்கி கொண்டாராம். இந்த உருவத்தில் அன்னைக்கு எல்லா நகைகளும் பூட்டி விலங்கும் பூட்டியிருந்தாராம். இரண்டடி உயரத்தில் இத்தகைய சிலைகள் சில செய்யப் பெற்றதாகவும், ஒரு சிலையைச் சுதேசமித்திரன் காரியலயத்திற்கு அனுப்பி வைத்ததாகவும் திரு சு. ர. சுப்பிரமணியம் கிராம ராஜ்யப் பத்திரிகையில் எழுதியிருக்கிறார். ஆனால் பாரததேவியின் உண்மையான சிலையையும் சித்திரத்தையும் பாரதி பாடல்களில்தான் காணமுடிகிறது.

**''சுதந்திர தாகம்'' என்ற தலைப்பில் வரும் பாட்டில்,**

**என்றெமது அன்னைகை**
**விலங்குகள் போகும்?**

என்ற வினா ஒன்று வருவதைக் காண்கிறோம். எனவே சிற்பி செய்த பாரத அன்னையின் சிலையிலும் கைவிலங்கு கால் விலங்குகள் இருந்தனவாம். அன்னியர் ஆதிக்கத்தில் அந்தச் சிலையை விலங்கின்றி அமைப்பது பொருந்தாது என்றே பாரதியார் தீர்மானித்து விட்டாராம்.

விலங்குகள் பூட்டிய சிலையில், நகைகளும் காதில், கழுத்தில் பூட்டியிருந்ததற்குக் காரணம் என்ன? நாட்டுச் செல்வங்களை அன்னியர் கொள்ளை கொண்டு போய்க் கொண்டிருந்த

தாக முரசு கொட்டி வந்த பாரதியாரே பாரத அன்னையை அணி செய்து பார்க்கவும் 'விரும்பினாராம். என்ன நகை வேண்டியிருக்கிறது, வறுமையில் உழலும் அம்மைக்கு?' என்று வ. வே. சு ஐயர் கேட்டும், அந்தக் கருத்தை ஞானி அரவிந்தர் ஆமோதித்தும், கவி பாரதி மட்டும் ஒப்புக் கொள்ளவில்லையாம். ஏன்?

இமயமலையையா (அன்னியன்) தூக்கிச் சென்று விட்டான்? கங்கை நதி, காவிரி நதிகளை எல்லாமா எடுத்துக் கொண்டு போய் விட்டான்? இவையெல்லாம்தான் என் தாயின் செல்வங்கள். வற்றாத வளம்தரும் மலையும் நதியும் காடுகளும், உள்ளவரை பாரததேவி செல்வங்கள் உடைய வள்தானே! ஓய் 'சிற்பியாரே, அன்னைக்கு எல்லா நகைகளும் பூட்டும்; ஆனால்விலங்கும் இருக்கட்டும்!' என்று பாரதியார் கூறியதாகத் தமிழக பூதான போர்டின் செயலாளர் திரு. சுப்பிரமணியம் தம் கிராமராஜ்யக் கட்டுரையில் தெரிவிக்கிறார்.

இரசமான நிகழ்ச்சி; பாரதியாரின் உள்ளப்பாங்கை உள்ளபடியே வெளியிடும் நிகழ்ச்சி. இந்தியாவின் இயற்கை அழகுகளையும் வளங்களையும் எந்த அன்னியராலும் கொள்ளைகொண்டு போகமுடியவில்லை; முடியவே முடியாது என்ற தேசபக்த குதூகலத்தைக் குறிப்பாகப் பாரதியாரின் பாடல்களிலும் காணத்தான் செய்கிறோம். இந்த நாட்டின் சூரியோதய சூரியாஸ்தமன அழகுகளைத்தான் கவர்ந்து செல்ல முடியுமா? குயில் பாட்டிலே,

**தங்கம் உருக்கித்**
**தழல்குறைத்து தேனாக்கி**
**எங்கும் பரப்பியதோர்**
**இங்கிதமோ!**

என்று பாரதியார் காலைக்கதிர் அழகைக் கற்பனை செய்திருக்கிறாரே. அந்த அழகுச்செல்வத்தைத்தான் எவரால்கொள்ளை கொண்டு செல்ல முடிந்தது?

'அணிகளுக்கோர் எல்லை யில்லாய்!' என்று பாரதியார் தம் முத்துமாரி பாட்டில் பராசக்தியை வருணித்திருக்கிறார். பராசக்தியின் அம்சமான பாரத சக்தியும், வடக்கே இமயமலை, தெற்கே குமரிமுனை, கிழக்கும் மேற்கும் கடல்கள் என்று எல்லை கொண்டிருந்தும், தன் அணிகளுக்கோர் எல்லையில்லாதவளே! இயற்கை யழகுகள் மட்டுமா? இவளுடைய நல்லணிகள், மெய்யணிகள், ஆன்மநேய ஒருமைப்பாட்டை வற்புறுத்தும் ஞானச் செல்வமும் இவளுடைய, நீங்காத மெய்யணிதான்! இந்தமெய்யணியை முக்கியமாக வைத்துக் கொண்டுதான் பாரதியார் தம் தேசிய ஒருமைப்பாட்டுக் கொள்கையை நிர்மாணம் செய்து பார்க்கிறார்.

பாரத அன்னையின் ஞான பொக்கிஷம் கலைப் பொக்கிஷத்திற்கும் ஆதாரமாக அமைந்திருக்கிறது. இலக்கியம், இசை, நாட்டியம், நாடகம், சித்திரம், சிற்பம் முதலான கலைகளையெல்லாம் இந்தியா சமய உணர்ச்சியுடன் வளர்த்து வந்திருக்கிறது என்பதைப் பலரும் அறிந்திருக்கிறார்கள். 'இன்னிசையாம் இன்பக்கடல்' என்று சொல்லும்படி இசைஞானம் பெருகி வந்திருக்கிறது. 'தீஞ்சொற் கவிதை யஞ்சோலை' என்று மகிழும்படி நம் கவிதை தழைத்துச் செழித்து வளர்ந்து வந்திருக்கிறது. இந்தக் கவிதையும், இந்த இசையும் தெய்வீக உணர்ச்சிகளைத் தழுவியே பெருகியுள்ளள; தெய்வீக—தேசீய ஒருமைப்பாடுகளுக்கும் சான்று தருகின்றன. சிற்பக்கலை சமயஞானம் வளரவளர தானும் வளர்ந்தோங்கி வந்திருக்கிறது என்பதற்குத் தென்னாட்டுத் திருக்கோயில்களைக் காட்டிலும் சாட்சி வேண்டுமோ?

நமது இயற்கைச் செல்வங்களோடு கலைச் செல்வங்களையும் ஞானப் பெருஞ் செல்வத்தையும் நினைத்துப் பார்த்தே பாரதியார் பாரத அன்னையின் சிலையை அணிகளால் அணி செய்யவேண்டியது அவசியம்தான் என்று முடிவு கட்டியிருக்கலாம். சிலையிலும் சித்திரத்திலும் பாரத

சக்தியைக் கற்பனை செய்து கொள்வதும் மக்களின் ஒருமை யுணர்வைத் தூண்டுவதற்கு ஒரு சிறந்த சாதனம்தான். தேசப்படத்தில் மட்டும் இந்தியாவைப் பார்க்கும் போது எல்லாருக்கும் ஒருமையுணர்வு வந்துவிடும் என்று கருது வதற்கில்லை. பூமிசாஸ்திர ரீதியாகவும் சரித்திர ரீதியா கவும் நமக்கு ஏற்பட்டிருக்கும் ஒருமையுணர்வைப் பாரத அன்னையின் சித்திரத்தாலும் சிற்ப உருவத்தாலும் அரண் செய்து கொள்வது நல்லதுதான். எனினும் பாரதியாரின் கவிச் சித்திரங்களைப் போல் எந்தச் சித்திரம்தான் தேசிய ஒருமைப் பாட்டுணர்வை இரசிகர் உள்ளத்திலும் அன்பர் உள்ளத்திலும் நிலைபெறச் செய்ய முடியும்? சிற்பக்கலையின் திறனால் முற்றும் உணர்த்த முடியாத ஒருமையுணர்வைப் பாரதியாரின் கவிச் சிற்பத்திறன் எவ்வளவு எளிதாக உருவாக்கி நிலை நிறுத்தி விடுகிறது!

தாய் என்று தேசத்தைப் போற்றும்போதே தேசத் திற்கு உணர்ச்சி ததும்பும் உருவத்தைப் படைக்கத் தொடங்கிவிடுகிறோம். இதற்கு ஒரு மந்திரம் போல் வந்து சேர்ந்ததுதான் 'வந்தே மாதர' முழக்கம். இந்தத் தாய்க்குக் கவி பாரதியின் சிந்தனைகளெல்லாம், உணர்ச்சி களெல்லாம், உயிர்ச் சக்திகளெல்லாம் உருவம் வரை கின்றன; வண்ணம் தீட்டுகின்றன. பாரதத்தாய் எழுத்துச் சித்திரத்தில்,—ஏன் ஒலிச் சித்திரத்திலே காட்சி வழங்கு கிறாள்.

**ஆலயம் தோறும் அணிபெற விளங்கும்**
**தெய்வச் சிலையெலாம் தேவிஇங்கு உனதே!**

என்று பங்கிம் சந்திரரின் வந்தேமாதர கீத மொழி பெயர்ப் பில் பாரதியார் கூறுவதைக் காண்கிறோம். பாரத சக்தியின் எத்தனை தெய்வச் சிலைகளுக்கு ஆலயமாய் இருக்கிறது பாரதியாரின் கவிதை.

நம் முன்னோர் தங்கள் 'சிந்தையில் ஆயிரம் எண்ணம்' வளர்த்து இத்தெய்வச் சிலையை ஆராதிப்பதை ஒரு பாட்டில் காண்கிறோம்.

**எண்ணமெலாம் நெய்யாக**
**எம்உயிரின் உள்வளர்ந்த**
**வண்ண விளக்கு இஃது**

என்று ஓர் அழகிய ஞான விளக்கை ஏற்றிப் பாரதியாரே தமது பாரத அன்னையைத் தொழுவதையும் கண்கிறோம். 'வந்தேமாதரம் வந்தே மாதரம்' என்று வணங்கிப் பணி புரிவதையும் காண்கிறோம். 'அமுதாக நிறைந்த கவிதை' யால் அபிஷேகம் செய்து பார், பார், என்று பிறருக்குக் காட்டுவதையும் காண்கிறோம்.

பாரதசக்தி வெள்ளிப் பனிமலைமீது உலாவுகிறது; கடல்களில் கப்பல் விடுகிறது; தென்கடலில் முத்துக் குளிக்கிறது. சுந்தரத் தெலுங்கில் பாட்டிசைக்கிறது. மராட்டியக் கவிதைக்கு மலையாளத்துத் தந்தங்களைப் பரிசாக அளிக்கிறது. ஆலைகள் வைத்து பொருள் ஈட்டுகிறது; கல்விச் சாலைகள் வைத்து அறிவுச் செல்வத்தைப் பெருக்குகிறது. உழுபடைகள் செய்து உணவைப் பெருக்குகிறது; ஏற்றுமதி செய்து வணிகத்துறையை வளமுறச் செய்கிறது. காடு வளர்க்கிறது; கலை வளர்க்கிறது. காகிதம் செய்து பத்திரிகைகளாலும் புத்தகங்களாலும் நாட்டுக்கு அறிவூட்டுகிறது. ஆயுதங்களும் செய்து அறப்போர்களிலும் முன்னே நிற்கிறது. இமயக் கிழவியாகவும் குமரியாகவும் காட்சி வழங்கி, 'இமயமலை எங்கள் மலையே' என்று வெற்றிப் பெருமிதத்துடன் நிமிர்ந்து பேசுகிறது.

தெய்வீக ஒருமைப்பாடு என்ற துறையிலே, வேதரிஷிகளின் ஞானபக்தியையும் ஆழ்வார் நாயன்மார்களின் ஞானபக்தியையும் சக்திமதத்தின் ஞானசக்தியையும் ஒருங்கே

போற்றுகிறது பாரத நாடு. புத்தன் அருளையும் கண்ணன் அருளையும் இணைத்துக் காட்டுகிறது; முருகனின் வீரத்தை யும் தாயாகிய கொற்றவை காளியின்வீரத்தையும் போற்று கிறது; பல நாடுகளுக்கும் அறிவை வழங்குகிறது, அறிவைப் பெற்றுக் கொள்ளவும் செய்கிறது. சமயத் துறையிலும் பழைய நெறிகளுடன் புதுநெறிகளுக்கும் தாராளமாக இடம் கொடுக்கிறது. வேதங்களைப்போற்றுகிறது உண்மை. காட்டும் எந்தநாட்டு நூல்களையும் வேதம் போல் போற்று கிறது. அறிவே தெய்வம் என்கிறது; சுத்த அறிவே சிவம் என்கிறது; அன்பும் சிவம்தான் என்கிறது.

தேசிய ஒருமைப்பாட்டையும் தெய்வீக ஒருமைப் பாட்டுடன் இணைத்துப்பேசும்போது, பாரதியார் செந்தமிழ் நாட்டை,

**வேதம் நிறைந்த தமிழ்நாடு**

என்று குறிப்பிடுகிறார். வேத முனிவருள் ஒருவராகிய அகத்தியர் முத்தமிழ் மாமுனியுமாகித் திகழுவதையும் குறிப்பிடுகிறார். தமிழ்க் கம்பன் பரிபூரண இராமாவதாரத் தைக் காவேரி தீரத்தில் கண்டு காட்டிய அதிசயத்தையும் குறிப்பாகக் காட்டுகிறார்.

**வாழிய செந்தமிழ்;**
**வாழ்க நற்றமிழர்**

என்று கூறிய வாயால், அதே மூச்சில்,

**வாழிய பாரத**
**மணித்திரு நாடு**

என்றும் பாடுகிறார். சிவாஜியையும் கோவிந்தரையும் இமயம் முதல் குமரிவரையுள்ள பாரத தேசத்தின் பொது வீரர் களாகக் காட்டி தமிழ் மக்கள் உள்ளத்தையும் வடநாட்

டினர் உள்ளத்துடன் ஒன்றுபட்டு உருகிவிடச் செய்து விடுகிறார்.

கப்பலோட்டிய தமிழ் வீரரான தம் நண்பர் சிதம்பரம் பிள்ளையைப் பாராட்டிப் பாடி இருப்பது போல், லாலா லஜபதிராய், திலகர், பூபேந்திரர் முதலான தேசியத்தலைவர் களையும் பாடுகிறார். இத்தலைவர்களிடம் தேசிய ஒருமை யுணர்வும் தெவீக ஒருமையுணர்வும் இரண்டறக் கலந்திருப் பதையும் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் சுட்டிக் காட்டுகிறார். சொல் விளக்கம் என்ற கோயிலைக் காட்டி அதன்மேல் சுதந்திரக் கொடியைத் தூக்கிய திலகரின் அந்தத் திருப்பணி மகாராஷ்டிர நாட்டுக்காக மட்டுமல்ல, இந்தியா முழுமைக்கும் பயன்பட்டது என்கிறார்; அரசியல் துறையிலும் வேறு துறைகளிலும் பயன்பட்டது என்கிறார்.

பாரதியாரின் தேசியப் பாடல்களில் தேசிய ஒருமையை யும் ஆன்மநேய ஒருமையையும் நாம் காண்கிறோம் என்பதில் ஐயமில்லை. இவரது தோத்திரப் பாடல்களில் ஆன்மநேய ஒருமைப்பாடு காணப்படுவது இயல்புதான்; இப்பாடல்களிலும் தேசிய ஒருமையுணர்வு குறிப்பாகவும் வெளிப்படையாகவும் ஊடுருவிக் கிடப்பதைக் காணலாம்.

அடியார் பலர்இங்கு உளரே;
அவரை விடுவித் தருள்வாய்

என்று தமிழ்த் தெய்வமாகிய முருகனை நோக்கி இவர் பிரார்த்திப்பதைத் தான் பாருங்கள்.

பொறிவே லுடனே
வளர்வாய்! அடியார்
புதுவாழ் உறவே
புவிமீது அருள்வாய்

என்றும் பிரார்த்திக்கிறார். புதுவாழ்வு பெறும் இந்த

அடியார்கள் இந்தியாவெங்கும் சிறைப்பட்டிருந்த தேச பக்தர்களே என்பது குறிப்பு.

பாரதியார் ஒரு சமயம் காளியிடம் சில வரங்கள் கேட்டார். எண்ணும் காரியங்களில் வெற்றி வேண்டும் என்றார்; தொழில் புரிய பெரும் நிதியம் வேண்டுமென்றார், அறிவுத் தெளிவு வேண்டுமென்றார், நித்தம வயிற்றை நிறைத்துக் கொண்டு சிறுகதைகள் பேசிப் பிறர் வாழ சிறுமைச் செயல்கள் செய்து மாண்டு போகும் வாழ்க்கை வேண்டாம் என்றார். எல்லாவற்றுக்கும் மேலாக, பல பண்களில் 'கோடிவகையின்பம்' காட்டும் பாட்டுத்திறன் வேண்டும் என்றார். இந்தத் திறனைக் கொண்டு இவர் செய்ய விரும்பியதுதான் என்ன?

'நாட்டோர் கீர்த்தி எங்கும் ஓங்கக் கவிபாடும் திறன் எனக்குத் தருவாய், அடிதாயே!' என்பது இவர் முடிவாகக் கேட்கும் வரம். இவர் 'நாட்டோர் என்று குறிப்பிடுவது பாரதபூமி எங்கும் வசிக்கும் மக்களைத்தான்; தமிழ் நாட்டாரை மட்டுமல்ல. இவரது மகாசக்தி உலகத்திற் கெல்லாம் பொதுவாகிய அன்னையாக இருந்தபோதிலும் பாரததேசத்திற்குச் சிறப்பாக உரியவள்தான்; ஆனால் பாரத பூமியின் ஒரு பகுதி மட்டும் சிறப்புரிமை கொண்டாடுவதிற்கில்லை. பாரத நாடு ஒரு குலமாக வாழ வேண்டும் என்று கருதும் பாரதியார் பாரத சக்தியைக் குலசக்தி என்று குறிப்பிடுவதையும் காண்கிறோம்.

**நியமம் எல்லாம் சக்தி**
**நினைவன்றிப் பிறிதில்லை**
**நெறியுண்டு, குறியுண்டு,**
**குலசக்தி வெறியுண்டு**

என்பது 'ஐயமுண்டு பயமில்லை' என்று தொடங்கும் பாட்டில் வரும் அனுபல்லவியின் பகுதி.

ஞானப் பாடல்கள் முதலியவற்றில் இந்து சமய சாரத்தை இவர் வற்புறுத்துவதும் இந்தியாவெங்கும் பரவியுள்ள தெய்வீக ஒருமைபாட்டைச் சுட்டிக் காட்டுவதாகும் எனக் கருதுவதும் பொருந்துவதே. 'வண்டிக்காரன் பாட்டு' 'அம்மாக்கண்ணு பாட்டு' முதலிய பாடல்களில் கற்றவர், கல்லாதவர் என்ற வேறுபாடு இன்றிக் கிராம மக்கள் நகர மக்கள் என்ற வித்தியாசமின்றி, இந்தியமக்கள் அனைவருக்கும் பொதுவாக உள்ள தெய்வீக ஒருமைப்பாட்டுணர்வைப் புலப்படுத்த முயன்று பார்த்திருக்கிருர் பாரதியார் என்பது என் கருத்து. நமது நாட்டிலே சாதாரண மக்களும் ஒருவகை வேதாந்த மனப்பான்மையும் மத நம்பிக்கையும் உடையவர்களாகவே இருக்கிருர்கள். இவர்களிடம் மூடநம்பிக்கைகள் அதிகம்தான்; ஆனல் இந்துமத சாரமான வேதாந்தக் கொள்கையும் அதற்குரிய விசுவாசமும் இல்லையென்று சொல்ல முடியாது. இவ்வுண்மையை நன்குணர்ந்தும் பாரதியார் சில பாடல்களைப் பாடி வைத்திருக்கிருர்.

பாரதியாரின் பலவகைப் பாடல்களிலும் தேசீய ஒருமைப் பாட்டுக்கும் தெய்வீக ஒருமைப் பாட்டுக்கும் சான்றுகளைக் காண்கிறோம். புதிய ஆத்திசூடியில், 'ஒற்றுமை வலிமையாம்' என்ற வாக்கு நம் தேசீய ஒருமைப் பாட்டின் விதைக் கருத்தல்லவா?

**கூடித்தொழில் செய்**

என்பதில் வேருெரு விதைக் கருத்தைக் காண்கிருேம்.

**கொடுமையை எதிர்த்து நில்**

என்ற வாக்கு இன்றும் என்றும் பொருந்தக் கூடியதுதானே?

**சேர்க்கை அழியேல்**

என்ற ஆத்திசூடியும் என்றும் அவசியமானதுதான்.

**தேசத்தைக் காத்தல் செய்**

என்று கூறுவதும்,

**தோல்வியில் கலங்கேல்**

என்று கூறுவதும்,

**பூமியை இழந்திடேல்**

என்பதும், கூர்ந்து கவனிக்கத்தக்கவை.

பாப்பாப் பாட்டிலும் ஒருமைப்பாட்டுக் கருத்துக்களைக் காணலாம். கூடி விளையாடச் சொல்லுகிறது முதற்பாட்டு.

**உயிர்களிடத்தில் அன்பு வேணும்—தெய்வம்**
**உண்மையென்று தானறிதல் வேணும்;**
**வயிரம் உடையநெஞ்சு வேணும்—இது**
**வாழும் முறைமையடி பாப்பா!**

என்று இப்பாட்டை முற்றுப் பெறச் செய்கிறது இறுதிப் பகுதி.

துன்பம் நெருங்கி வந்தாலும் சோர்ந்துவிடலாகாது என்று கூறும் கவிஞர் அநியாயமாகத் துன்பம் செய்கிறவர்களுக்கு அஞ்சவே கூடாது என்கிறார்.

**பாதகம் செய்பவரைக் கண்டால்—நாம்**
**பயங்கொள்ள லாகாது பாப்பா**

என்றும்,

**திடம்கொண்டு போராடு—பாப்பா!**

என்றும், இவர்தம் பாப்பாவுக்கு உபதேசிப்பதைக் கேளுங்கள்.

தமிழ்த் திருநாடு என்ற நினைவு வந்ததும் அன்பு இவரை அப்படியே மூழ்கடித்து விடுகிறது. இந்நாடு 'அமிழ்தில் இனியது' என்கிறார். 'சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே!' என்கிறார். இத்தகைய அபிமான நிலையிலும் தேசிய ஒருமைப்பாடு மறக்கப்படவில்லை.

செல்வம் நிறைந்த இந்துஸ்தானம்

என்று வடநாட்டையும் தொடர்பு படுத்தியே தேசபக்தி உபதேசம் செய்கிறார் தம் பாப்பாவுக்கு.

பாரதியாரின் முப்பாட்டிலும் ஒருமைப்பாட்டுணர்ச்சி மேலிடுவதைக் காண்கிறோம். 'வேதம் என்றும் வாழ்க' என்றுதான் முரசு கொட்டத் தொடங்குகிறது. ஒரே குடும்பமாகிய இந்தியா சாதிப் பிரிவுகள் இன்றி ஒத்து வாழ வேண்டும் என்கிறார். ஆண்மையும் பெண்மையும் இரண்டு கண்களாக விளங்க வேண்டும் என்கிறார்.

தகரென்று கொட்டு முரசே—பொய்மைச்
சாதி வகுப்பினை யெல்லாம்

என்று தேசிய ஒருமைப்பாடு பேசியவர்,

நிகரென்று கொட்டு முரசே—இந்த
நீணிலம் வாழ்பவ ரெல்லாம்

என்று உலக ஒருமைப்பாட்டையும் நினைவூட்டுகிறார்.

பாதியாருக்குப் பணவெறியாட்சியிலும் நம்பிக்கை கிடையாது; இராணுவ வெறியாட்சியிலும் நம்பிக்கை இல்லை.

செம்புக்கும் கொம்புக்கும் அஞ்சி—மக்கள்
சிற்றடிமைப் படலாமோ?

என்று இவர் கேட்கிறார். செம்புக்கும் கொம்புக்கும் மேலானது அன்புதான் என்கிறார். அன்போடு அறிவை வளர்த்திட வேண்டுமென்கிறார்.

அறிவை வளர்த்திட வேண்டும்—மக்கள்
அத்தனை பேருக்கும் ஒன்றாய்

என்று இவர் கூறுவது கூர்ந்து நோக்கத்தக்கது.

அத்தனை பேருக்கும் ஒன்றாக அறிவை வளர்க்க வேண்டும் என்றவர்,

**வயிற்றுக்குச் சோறிட வேண்டும்—இங்கு**
**வாழும் மனிதருக் கெல்லாம்**

என்பதையும் தெளிவாக வற்புறுத்துகிறாரல்லவா? பொருளாதாரத் துறையிலும் கல்வித் துறையிலும் மனிதர் சமத்தன்மையும் சகோதரத் தன்மையும் பெற்று முன்னேற வேண்டும் என்ற இக்குறிப்பிலே தேசிய ஒருமைப்பாட்டுணர்வுடன் உலக ஒருமைப் பாட்டுணர்வையும் காண்கிறோம்.

முரசுப் பாட்டின் இறுதிச் செய்யுள் இக் கருத்தை மிக மிகத் தெளிவுபடுத்தியிருக்கிறது:

**ஒன்றென்று கொட்டு முரசே!—அன்பில்**
**ஓங்கென்று கொட்டு முரசே!**
**நன்றென்று கொட்டு முரசே!—இந்த**
**நானில மாந்தருக் கெல்லாம்.**

ஒரு வகையில் பாரதியார் பாடல்களையெல்லாம் முரசுப் பாடல்கள் என்றே கருதுவதும் பொருத்தமே. முரசு என்ற தலைப்பில் உள்ள பாடல்களில் காண்பதைவிடப் பாரதியாரின் கவிமுரசை வேறு பாடல்களில் அழுத்தமாகவும் பாட்டுத் திறனுடனும் காண்கிறோம். தேசிய ஒருமைப்பாடும் தெய்விக ஒருமைப்பாடும் பிரசார மனப்பான்மையுடன் தான் முரசுப் பாடல்களில் குறிக்கப்பெற்றுள்ளன. மற்றப் பாடல்களில் ஒருமையுணர்ச்சி அதிக அளவில் கவிதா சந்நதம் பெற்று வெளிப்படுவதைக் காண்கிறோம். கள்ளையும் தீயையும் சேர்த்துப் புயல் காற்றையும் வான ஒளியையும் சேர்த்துப் பாடியிருக்கும் கவிதைகளில்தான் பராசக்தியும் போர் முரசுபோல் விளங்கிய பாரதியாரின் ஒருமைக் குரலை உள்ளபடியே கேட்கிறோம். இப்பாடல்களில் தேசிய

ஒருமையும் ஆன்மநேய ஒருமையும் பெரும்பாலும் சேர்ந்து குரல் கொடுப்பதைக் கேட்கிறோம்.

பாரதி சித்திரத்திலும் சிலையிலும் செய்வித்த பாரத சக்தியின் உருவம் மறைந்துவிடலாம்—மறையக் கூடியது தானே? ஆனால் பாரதியாரின் கவிதைகளில் நாம் காணும் அன்னை உருவத்திற்கு அழிவு ஏது? பாரதியாரின் அழகுணர்ச்சியும் மனோபாவமும் இசையுணர்ச்சியும் அகண்டமான கவிதைப் போக்கும் சேர்ந்து சமைத்த திரு உருவம் அல்லவா? அன்னிய அரசு மறைந்தது; பழக்க வழக்கங்களும் மாறி வருகின்றன. நாகரிகமும் மாறிக்கொண்டே வருகிறது. இப்படி எத்தனையோ மாறுதல்களுக்கிடையே, அன்று பாரதியாரின் உள்ளத்தை ஆட்கொண்ட பாரதசக்தி இன்றும் இவர் கவிதை வாயிலாக எத்தனையோ உள்ளங்களில் ஆட்சி செலுத்திக் கொண்டுதான் இருக்கிறது; வருங் காலத்திலும்—அண்மையிலும் சேய்மையிலும்—கோடிக் கணக்கான மக்களின் இதய பீடத்திலே கொலுவீற்றிருக்கக் கூடியதுதான் பாரதி தோற்றுவித்திருக்கும் பாரத சக்தி.

ஸாக்ரடீஸ், புத்தர் முதலானவர்களின் ஸ்தூல உருவங்கள் மறைந்துவிட்டன. அவர்கள் வசித்த இடங்கள் அழிந்து விட்டன. ஆனால் அவர்களுடைய தூய சிந்தனைகள் இன்றும் நல்ல வழிகாட்டுகின்றன. பாரதியாரின் எண்ணங்களும் உணர்ச்சிகளும் கவிதை வாயிலாக உருவாக்கியுள்ள பாரத சக்தியின் வண்ணச் சிலையும் சித்திரமும் இன்றும் தேசபக்த ரசிகர்களுக்கெல்லாம் தரிசனம் அளிக்கின்றன; அளித்துப் புதிய புதிய உணர்ச்சிகளை அலை அலையாக எழுப்புகின்றன.

'சந்திரமதி' என்ற அழகுநிறைந்த ஒரு பாட்டில் பாரதியார் 'நாம் தேவியை எங்கே பார்த்தோம்?' என்பதை நினைவூட்டிக் கொள்ளப் பார்க்கிறார். கடலில் தேடுகிறார், நாட்டில் தேடுகிறார், உலகமெங்கும் தேடுகிறார். மண்ணில் தேடுகிறார், விண்ணில் தேடுகிறார். இறந்த காலம், நிகழ்காலம்,

வருங்காலம் என்ற மூன்று கால வெள்ளங்களிலும் வலை போட்டுப் பார்க்கிறார். கண்டாரா?—ஆம்; 'கண்டோம், கண்டோம்; கண்டோம்! காட்சிக்கு இனியதையும் அரிய தையும் கண்டோம்' என்கிறார்.

நீலக்கடலில் தேவியின் நீண்ட கூந்தல் தோன்றியது என்கிறார். அவள் குளிர்ந்த முகத்தைச் சந்திர பிம்பத்தில் கண்டோம் என்கிறார். அவருடைய ஞானஒளி பிரபஞ்ச வெளியிலே வீசக் கண்டோம் என்கிறார். மேலே, மேலே, என்று சென்று கொண்டிருக்கும் காலத்தின் நடையிலே தேவியின் காதல் விளங்கியதாகவும் சொல்லுகிறார்.

பாரதியார் கவிதையில் நாம் காணும் பாரத சக்தியை நாட்டிலும் காண்கிறோம்; காட்டிலும் காண்கிறோம்; எல்லைப்புறத்திலும் காண்கிறோம். சிறப்பாகத் தேசிய ஒருமைப் பாட்டிலும் அதற்கு அடிப்படையான தெய்விக ஒருமைப்பாட்டிலும் காண்கிறோம்.

# 5. தமிழ்க் கவிஞர் கண்ட வங்கக் கவிஞர்

ரவீந்திரநாதர் ஆங்கிலத்தில் எழுதிய ஒரு பாடலின் மொழி பெயர்ப்பு நாட்டுக் கல்வி என்ற தலைப்பில் பாரதியார் கவிதைகளிடையே சில பதிப்புக்களிலே பிரசுரிக்கப் பெற்றிருப்பதைக் காணலாம். இது மற்றப் பாடல்களைப் போல் அவ்வளவு பிரசித்தமாக நம் மக்களுக்குத் தெரிந்த பாட்டல்ல. இதிலுள்ள பாட்டுத் திறனும் குறிப்பிடத்தக்க தகுதி வாய்ந்தது என்று சொல்ல முடியாது. ஆனால் இம்மொழி பெயர்ப்புப் பாட்டின் வாயிலாக நம் தேசிய மகா கவிக்கு ரவீந்திரநாதரின் கருத்துக்கள் மீதுள்ள ஆர்வம் ஓரளவு புலனாகும்.

**விளக்கிலே திரி**
**நன்கு சமைந்தது**

என்று இப்பாட்டு ஆரம்பமாகிறது.

'தீபம் ஏற்றுவதற்காகத் தீக்கொண்டு வாருங்கள் தோழர்களே!' என்ற அழைப்பும் காதில் விழுகிறது. இந்தத் தீபத்தைக் கொண்டு இருளைக் கடந்து செல்ல விரும்புவோருக்கே இந்த அழைப்பு, இருள் கடந்து ஏகுவது தான் எங்கே?

**காலைச் சோதிக்**
**கதிரவன் கோவிற்கே!**

என்று ஒரு விடை கிடைக்கிறது. விண்மீன்களான நட்சத்திரங்களிடம் செல்வதற்கும் இந்த விளக்கு உதவு

மாம். இந்த யாத்திரிகர்கள் தங்கள் கூட்டத்தில் சேர வாருங்கள் என்று தோழர்களையும் கூவி அழைக்கிறார்களாம். இப்படிக் 'களிப்பு மிஞ்சி ஒளியினை பண்டொரு காலம் நீர் சென்று தேடியதில்லையோ?' என்று வினவுடன் முற்றுப் பெறுகின்றது முதற்பாட்டு. இந்த விதமாக ஒளிதேடியவர்கள் முன்னோர் என்பது குறிப்பு.

அத்தகைய இந்தியர்கள் மயங்கிச் சோம்பி வழி நடையில் பிந்தி விட்டார்கள்; தங்கள் விளக்கையும் அணையவிட்டார்கள். ஏதேதோ கெட்ட கனுக்களும் கண்டுகொண்டிருந்தார்களாம். அந்த நிலையில்இருள் அதிகரித்தது. நரகத்திலுள்ள உயிர்கள் ஏங்கி மூச்சுவிடுவதுபோல் ஒலிக்கிறதாம் காட்டிடையே வீசும் காற்று. இந்தப் பரிதாப நிலையிலும் ஒரு பேரொலி கால வெள்ளத்தைத் தாண்டி வந்து இந்தியாவின் காதில் விழுகிறதாம். அது முன்னைக் காலத்தின் பேரொலி, மந்திரவேதத்தின் பேரொலி என்கிறார் தாகூர். அந்தப் பேரொலிதான் எது?

ஆழ்ந்த தூக்கத்தில், தீக்கனுக்கள் கண்டு கொண்டிருப்பவர்களைத் துயிலெழுப்பும் பள்ளியெழுச்சிக் கீதமாக முழங்குகிறதாம் அப்பேரொலி.

**இருளை நீக்கி**
**ஒளியினைக் காட்டுவாய்;**
**இறப்பை நீக்கி**
**அமிர்தத்தை ஊட்டுவாய்!**

என்பதுதான் அந்த வேத மந்திரப் பேரொலி. அது துயிலெழுப்பியும் 'நீங்கள் விழித்தெழும் ஆற்றல் பெற்றிருக்கவில்லையோ? தீயநாச உறக்கத்தில் வீழ்ந்தவர்களே!' என்று கூவுகிறார் ரவீந்திரர். நீங்கள் மருளைநீக்கி அறிந்து கொள்ளுங்கள். அறிந்து கொள்ள மாட்டீர்களா?

''வானொளிக்கு உரிமையுள்ள மக்கள் நாம்'' என்பதைத் தெரிந்து கொள்ள மாட்டீர்களா? என்று கதறுகிறது தாகூரின் இதயம்.

தாகூர் பாடலின்—அழகைத் தமிழ் மொழி பெயர்ப்புப் பாட்டிலே பார்க்க முடியவில்லை என்றாலும், கருத்துக்களைத் தமிழ் வலை விசிப் பிடித்துவிட்டார் பாரதியார். தேசியப் பேருணர்ச்சி மக்களை ஆட்கொள்வதற்கு நாட்டுக்கல்வி இன்றியமையாதது என்பதை உளம் உருகி உணர்ந்து கொண்ட ரவீந்திரரின் இதயம் பாரதியாருக்குப் புரிந்து விட்டது. அந்த இதயத்தோடு இந்த இதயமும் இணைந்திருந்தது காரணம் எனலாம். நம் கல்வி காலத்திற்கு இசைந்த விஞ்ஞான முறையிலும் மனோதத்துவமுறையிலும் அமைந்திருக்கும் புதுக் கல்வியாகத்தான் இருக்கவேண்டும் என்பதில் ரவீந்திரருக்கோ, பாரதியாருக்கோ, துளியும் ஐயப்பாடு இல்லை. ஆனால் நமது மூலப் பொக்கிஷமாகிய ஞான அடிப்படையை நாம் புறக்கணிப்பது தற்கொலை தான், ஆன்மநாசம்தான், சன்மார்க்க நாசமும்கூட. இப்படிக் கருதினார் ரவீந்திரர். பாரதியாரும் இக்கருத்தை ஆதரித்தார்; பல்வேறு பாடல்களில் இதற்கு அகழி வெட்டி அரண் அமைத்துக் கோயிலும் கட்டியிருக்கிறார்.

'பாரத மாதாவின் திருப்பள்ளியெழுச்சிப்' பாடல்களிலும் மேலே சொன்ன ரவீந்திரர் வாக்கின் எதிரொலியைக் காண்கிறோம்.

**பருதியின் பேரொளி**
**வானிடைக் கண்டோம்;**
**பார்மிசை நின் ஒளி**
**காணுதற்கு அலந்தோம்.**

என்று பாடுவதைத்தான் பாருங்கள். உன் அருளுக்காக எத்தனை காலம் ஏங்குவோம்! என்று பாரதமாதாவின் தொண்டர்கள் கூறுவதும்,

மதலையர் எழுப்பவும்
　　தாய் துயில்வாயோ?

என்று கேட்பதும் கவனிக்கத்தக்கவை.

வேத மந்திரங்கள் மீதும் உபநிஷத ஞானத்தின் மீதும் பாரதியாருக்கு ஆர்வம் ஏற்பட்டதற்கு அதிமுக்கிய காரணம் அரவிந்தரின் கூட்டுறவுதான். எனினும், ஆரம்ப காலத்தில் ரவிந்திரரின் எழுத்துக்களில் பாரதியார் கொண்டிருந்த ஆர்வமும் இவரை வேத வேதாந்தப் பெருநெறியில் செல்லத் தூண்டியது என்று கருதுவது தவருகாது. ரவீந்திரர் மீது நம் பாரதியாருக்குள்ள பக்தி 'பாரத மாதா நவரத்தின மாலை' என்ற தலைப்பில் இவர் பாடியிருக்கும் ஒரு பாட்டிலிருந்தும் இனிது புலனுகிறது. இப்பாட்டிலே பாரதியார் வங்கக்கவிஞரை உலகெலாம் புகழப் பண்சுமந்த பாடல்கள் பல பாடியவர் என்று குறிப்பிடுகிருர்.

இன்ப வளம்செறி
　　பண்பல பயிற்றும்
ரவீந்திர ஞகிய
　　ரவீந்திர நாதன்

என்று பாராட்டுகிருர்.

வசிஷ்டர்வாயால் பிரம்மரிஷி என்று விசுவாமித்திரர் சொல்லப்பட்டதுபோல் காந்தியடிகள் ரவீந்திரர் வாயால் 'புவிமிசை இன்று மனிதர்க்கெல்லாம் தலைப்படு மனிதன்' என்றும், 'தருமமே உருவானவர்' என்றும் புகழப் பெற்றிருக்கிருரே என்று வியந்து பாராட்டுகிருர் பாரதியார். அத்தகைய காந்தியை அரசியல் நெறியிலே தலைவனுகக் கொண்டு தருமமே அரசியலிலும் வேறு 'இயல்'களிலும் வெற்றி தரும் என்று வேதம் சொன்னதை நம்பியிருக்கிருர்கள் நம் பாரதமக்கள் என்று இவர் கூறுவதில், காந்தியடிகளின் கவி ரவீந்திரரும் புகழப் பெற்றிருப்பதைக் காண்கிருேம்.

காளிதாசன் என்ற:புனைபெயரால் பாரதியார் 1921-ம் ஆண்டில்—அதாவது இவர் இறந்ததற்குச் சுமார் ஒரு மாதத்திற்கு முன்புதான்—ஸ்ரீ ரவீந்திர திக்விஜயம் என்ற தலைப் பெயருடன் சில குறிப்புக்கள் எழுதியிருக்கிறார். கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு என்ற தமிழ்ச் செய்யுள் ஒன்றின் பகுதியை எடுத்துக் காட்டி, கீர்த்தியடைந்தால் மகான் ரவீந்திரரைப்போல் அடையவேண்டும் என்று தொடங்குகிறார். 'வங்காளத்தில் மாத்திரமா? இந்தியா முழுமையுமா? ஆசியா முழுதுமா? ஜெர்மனி, ஆஸ்திரியா, பிரான்சு பூமண்டல முழுமையும் பரவினகீர்த்தி' என்று தொடர்ந்து கூறுகிறார்.

பாரதியார் அந்தக் கீர்த்திக்குக் காரணத்தையும் கூறுகிறார். 'இத்தனைக்கும் அவர் பாடிய பாட்டுக்களோ வங்க பாஷையிலே உள்ளன. வெறும் மொழி பெயர்ப்புக்களைத் தான் உலகம் பார்த்திருக்கிறது. அதற்குத்தான் இந்தக் கீர்த்தி' என்கிறார். ரவீந்திரரை ஐரோப்பா மதித்துப் பாராட்டியதற்குக் காரணம் என்னவென்று சிந்தித்துப் பார்க்கிறார் பாரதியார். அந்த நாள்வரை ஐரோப்பாக் கண்டத்தின் வித்யா ராஜாதானியாக விளங்கிய ஜெர்மனியில் முதல் முதல் ரவீந்திரநாதர் மதிக்கப்பட்டு உபசரிக்கப் பெற்றதுதான். அதைப் பின் பற்றி மற்ற முக்கிய ஐரோப்பிய தேசங்களும் அவரைப் பூசித்ததற்குக் காரணம் என்கிறார். ஜெர்மன் அறிஞர்கள் ரவீந்திரரின் அறுபதாம் ஆண்டு விழாவை முன்னிட்டுத் தங்கள் மொழியிலுள்ள மிக முக்கியமான நூல்கள் அடங்கிய விலையுயர்ந்த புத்தகத் தொகுதி ஒன்றை ரவீந்திரருக்குச் சன்மானித்தார்களாம்.

ஐரோப்பாவில் ரவீந்திரருக்குக் கிடைத்த சிறப்பையும் மரியாதையையும் குறித்து ஒரு பத்திரிகையில் வெளிவந்த நிருபத்திலிருந்தும் சில கருத்துக்களைப் பாரதியார் எடுத்துக் காட்டுகிறார்: ரவீந்திரர் சபைக்குள் வந்து பிரவேசித்த மாத்திரத்தில் எங்கள் அறிவுக்கு எட்டாத ஒரு சக்தி வந்து

புகுந்தது போலிருந்தது என்கிருர் அந்த நிருபர். ரவீந்திரர் எல்லையில்லாத வேகத்துடன் லயித்து நின்ருர் என்பதையும் அந்த நிருபர் குறிப்பிட்டிருக்கிருர். ஆசியா ஐரோப்பா விடமிருந்து கற்றுக் கொள்ளவேண்டிய உண்மைகள், பெற்றுக் கொள்ள வேண்டிய சக்திகள் பல உண்டு என்பதை ஒப்புக்கொள்ளும் ரவீந்திரர் நாம் மேலே நாட்டாரிடம் கற்றுக்கொள்ள வேண்டிய அம்சங்களைக் காட்டிலும் அவர் கள் நம்மிடம் கற்றுக்கொள்ள வேண்டிய அம்சம் அதிகம் என்பதை வற்புறுத்திஞராம். ஆசியாவும் ஐரோப்பாவும் ஒற்றுமைப்பட்டு, சமதன்மை, சகோதரத்தன்மை, அன்பு என்ற தளைகளால கட்டுண்டு வாழவேண்டும் என்பதையும் வற்புறுத்திஞராம். ரவீந்திரரின் உள்ளத்தை ஜெர்மனி நன்ருக உணர்ந்து அளவறிந்த மதிப்பும் நன்றியும் செலுத்து வதாகப் பாரதியார் எழுதியுள்ளார்.

தம் குறிப்புக்களில் பாரதியார் ரவீந்திரரைப் பாரத கவிராஜ ரவீந்திரர் என்கிருர். இதுவன்ரே புகழ்! என்று வியக்கும் பாரதியார் 'தோன்றில் புகழோடு தோன்றுக' என்று திருவள்ளுவர் கூறியிருப்பதையும் நினைவூட்டுகிருர். 'ரவீந்திரநாதர் இந்தியாவைப் பூலோக குரு என்று பூமண்டலத்தார் கண்முன்னே நிலைநாட்டிக் கொடுத்தார். அவருடைய திருவடி மலர்கள் வாழ்க' என்று முடிகிறது பாரதியாரின் குறிப்புக்களில் ஒன்று. 'இந்தியாவின் ஞான உபதேசமாகிய அமிர்தத்திற்கு ஐரோப்பாவில் உயர்ந்த தரத்து மேதாவிகள் எத்தனை வேட்கையுடன் காத்திருந் தார்' என்பதையும் வியந்து குறிப்பிடுகிருர் பாரதியார்.

'தங்கள் முன்னே மற்ருெரு லோகத்திலிருந்து ஒரு மனிதன் வந்ததுபோலே தாகூர் வந்தார்' என்ற உணர்ச்சி ஐரோப்பிய அறிஞர்களிடையே ஏற்பட்டதாக ஆஸ்திரிய நிருபர் ஒருவர் எழுதியதையும் பாரதியார் எடுத்துக் காட்டு கிருர். இந்தியாவின் எந்த உண்மையைத் தெரிவித்ததால் ரவீந்திரருக்கு இவ்வளவு புகழும் பாராட்டும் ஏற்பட்டன

என்பது குறித்தும் பாரதியார் ஆராய்ந்து பார்த்துத் தம் கருத்தைச் சுருக்கமாக வெளியிட்டிருக்கிறார். 'அஃதீ பழைய வேத உண்மை' என்கிறார். எல்லாப் பொருள்களையும் ஒரே வஸ்துவாகக் காணும் ஒருவனுக்கு மருட்சி ஏது, துயரம் ஏது? என்று கேட்கிறார். 'எல்லாம் ஒரே பொருள்' என்று கண்டவன் எதனிடத்தும் கூச்சமேனும் வெறுப்பேனும் அச்சமேனும் எய்தமாட்டான் என்கிறார். இத்தகைய ஆன்மநேய ஒருமைப்பாடுதான் பாரதியார் பாடல்களிலும் நாம் காணும் தெய்வீக ஒருமைப்பாடு.

இத்தகைய ஒருமைப்பாடு கண்டவன் 'எல்லாப் பொருள்களிடத்தும் அன்பும் ஆதரவும் சந்துஷ்டியும் பக்தியும் செலுத்துவான்' என்றும் பாரதியார் கூறுகிறார். 'எல்லாப் பொருளிலும் திருப்தி பெறுவோன் எப்போதும் திருப்தியில் இருப்பான்' என்றும் கூறுகிறார். இந்த நிலையை 'மனிதன் அப்பியாசத்தாலும் நம்பிக்கையாலும் இந்த உலகத்தில் எய்திவிட முடியும்' என்றும் இவர் நம்புகிறார். 'இஃதே வேத ரகசியம்' என்கிறார். இந்தப் பரம தத்துவத்தை மிக இனிய தெளிந்த வசனங்களாலே ஐரோப்பாவுக்கு எடுத்துக் கூறியது பற்றியே ரவீந்திரக் கவி சக்கரவர்த்திக்கு ஐரோப்பா இங்ஙனம் அற்புத வழிபாடு செலுத்திற்று' என்று கூறி முடிக்கிறார் பாரதியார்.

இந்த வேத இரகசிய உண்மையைத்தான்—பரமதத்துவத்தைத்தான்—தெய்வீக ஒருமைப்பாடாகப் பாரதியாரின் 'மிக இனிய தெளிந்த' கவிதைகளிலும் காண்கிறோம். இந்த உண்மையைத் தாகூரைப்போல் பாரதியாரும் நன்குணர்ந்திருந்தார் என்பதற்கு இக்கவிதைகளே சாட்சி, ஆன்மநேய ஒருமைகண்ட பாரதிக்கும் மருட்சி இல்லை என்றே சொல்ல வேண்டும். எதனிடத்தும் வெறுப்போ, அச்சமோ கூச்சமோ இல்லை என்றும் உறுதியாகச் சொல்லலாம். பாரதியார் எல்லாப் பொருள்களிடத்தும் ஆதரவும் பக்தியும் கொண்டவர் என்பதிலும் ஐயத்திற்கு இடமில்லை.

ஆனல் பாரதியாரின் வாழ்க்கை துயரமற்றதுதானு? எல்லாப் பொருளிலும் திருப்தி கொண்டிருந்த இக்கவிஞர் எப்போதும் திருப்தி நிலையிலிருந்தாரா?

ரவீந்திரரைப்போல் பாரதியாரை உலகம் பாராட்ட வில்லை; அந்தக் காலத்தில் உலகம் தெரிந்துகொள்ளவில்லை என்பது நிச்சயம். இந்தியாவும் பாரதியாரை அந்த நாளில் தாகூரைப்போல் அறிந்திருக்கவில்லை. ஏன், தமிழ் நாட்டி லும் பாரதியாரைச் சிலரே நன்ருக அறிந்திருந்தார்கள். பாரதியாருக்குத் தன் மேதையை இந்தியாவுக்கும் உலகத் துக்கும் அறிவித்துக் கொள்ள வசதிகளும் இல்லை. வறுமையோ வாட்டிவதைத்தது. அந்த நிலையிலும் பாரதியார் அற்புதக் கவிதைகளை இயற்றித் தந்திருக்கிருர் என்ருல் உள்ளுக்குள்ளே ஒருயிர் உண்மை என்ற ஆன்மநேய ஒருமைப்பாடு போதுமான சக்தியை அளித்துத்தானே யிருக்க வேண்டும்; உள்ளத்தில் உவகையும் ஊறிக்கொண்டு தான் இருந்தது என்று கருதுவதும் பொருத்தமே.

'திருவே! உன்மேல் மையலாகி நிற்கிறேன்; உன் இன்பம் வேண்டுகிறேன்' என்று பொருள்படப் பாடும் பாரதியார், செல்வங்கள் நிறையக் கிடைத்தால் என்ன செய்வார் என்பதையும் குறிப்பிட்டிருக்கிருர்.

இல்லை என்ற கொடுமை—உலகில்
இல்லையாக வைப்பேன்

என்கிருர்.

இமயவெற்பில் மோத—நின்மேல்
இசைகள்பாடி வாழ்வேன்

என்றும் கூறுகிருர். இத்தகைய கூற்றுக்களிலிருந்து, வசதிக் குறைவுகள் இருந்ததால் கவிதைத் துறையில் இவரது முழு நோக்கமும் நிறைவெய்தவில்லை என்று ஊகிக்கலாம்.

தாகூரைப்போல் இவர் நீண்ட வாழ்வு வாழவில்லை என்பதும் பிரசித்தம்.

அழகுணர்ச்சியிலும் மனோபாவத்திலும் இசையுணர்விலும் பாரதியார் தாகூருக்குக் குறைந்தவரில்லை. தாகூரின் கவித்திறனில் புலமைத் திறனும் கலைத்திறனும்கூட அதிக அளவில் காணப்படுகின்றன என்பது என் கருத்து. இதன் உண்மை எப்படி இருந்தாலும் பாரதியார் 'ரவீந்திரக் கவிச் சக்கரவர்த்தி' என்றும், பாரத கவிராஜ ரவீந்திரர், என்றும் இவ்வங்கக் கவிஞரைப் பாராட்டியிருக்கிறார் என்பது கவனிக்கத் தக்கது. கவிஞன்தான் கவிஞனை உள்ளபடி அறிய முடியும்.

ரவீந்திர நாதரின் சில வியாசங்களையும் பாரதியார் மொழி பெயர்த்திருக்கிறார். ஜாதி என்ற தலைப்பில் 1902-ம் ஆண்டு பிப்ரவரியில் ஒரு வியாசத்தை மொழி பெயர்த்து வெளியிட்டார். மொழி பெயர்த்தவரின் ஒரு குறிப்பும் வியாச முகப்பில் காணப்படுகிறது. சிறிதும் பெரிதும் என்ற தலைப்பில் ஒரு வியாசம் மொழி பெயர்க்கப் பட்டது. இந்த வியாசம் ஜாதி என்ற வியாசத்தைக் காட்டிலும் நீளமானது. 'ஜப்பானுடைய ஆவி' என்ற தலைப்பில் ஓர் உபந்நியாசமும் இவரால் மொழிபெயர்க்கப் பெற்றிருக்கிறது. 1917ல் ரவீந்திரநாதர் இந்த உபந்நியாசத்தை ஜப்பானில் நிகழ்த்தினார். இதில் ஜப்பானுக்குப் பாராட்டுடன் உபதேசமும் எச்சரிக்கையும் அடங்கியிருக்கின்றன. 'கல்வி கற்பிக்கும் பாஷை' என்ற கட்டுரையையும் பாரதியார் மொழி பெயர்த்தார். 'அடங்கிநட' என்ற கட்டுரையும் பாரதியாரால் மொழி பெயர்க்கப்பட்டது.

கவிதை நடையில் அமைந்து பரந்த ஆழ்ந்த கருத்துக்களைத் தாங்கிநிற்கும் தாகூர்-கட்டுரைகளைச் சுவைகுன்றாமல் மொழிபெயர்ப்பது எளிதன்று. ஆனால் பாரதியாரின் அழகியமொழிபெயர்ப்பில்வெற்றியைத்தான் காண்கிறோம்.

ஏற்கெனவே ரவீந்திரரின் வாக்கிலே பாரதியாருக்குப் பற்று இருந்தது. ஏற்கெனவே சில கதைகளையும், கவிதைகளையும், கட்டுரைகளையும் மொழிபெயர்த்திருந்தார். வசன கவிதை எழுதுவதற்கும் ரவீந்திரரே இவருக்கு வழிகாட்டியாக இருந்தார். இத்தகைய தமிழ்க்கவிஞர் பாரதியாரின் ஐந்து கட்டுரைகளையும் தாகூரின் பஞ்ச வியாசங்கள் என்ற தலைப்புடன் ஒரு நூலாக வெளியிட்டது ஒரு நல்ல தமிழ்ப்பணி தான். இந்த நூலின் பிரதிகள் இப்போது கிடைப்பதில்லை. எனினும் இந்தத் தமிழ் வியாசங்களைப் ‘பாரதி தமிழ்’ என்ற தலைப்பெயருடன் திரு. பெ. தூரன் வெளியிட்டிருக்கும் ஒரு நூலில் கண்டுகொள்ளலாம். ‘அடங்கிநட’ என்ற வியாசம் மட்டும் வேறொரு நூலில் வெளியாகியுள்ளது.

கவி ரவீந்திரர் 1861ல் தோன்றினர். பாரதியாரோ ரவீந்திரரின் இருபத்தோராம் வயதில் பிறந்தார்—அதாவது 1882ல், எனினும் தாகூருக்கு முன்பே காலமாகி விட்டார். தாகூர் 1941-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் கல்கத்தாவில் காலமானர். பாரதியார் 1921ல் செப்டம்பர் 11ம் நாள் சென்னையில் காலமானர்—அதாவது, தாகூர் காலமாவதற்கு இருபது ஆண்டுகளுக்கு முன்பே. இப்படிப் பின் தோன்றி முன் மறைந்தவர் ரவீந்திரநாதரைக் குறித்து நன்கு அறிந்து பாராட்டியிருக்கிறார்; இது இலக்கிய உலகில் ஒரு நற்பெருஞ் செய்தியாகும்.

ரவீந்திரரின் பஞ்ச வியாசங்களில் வெளியாகி இருக்கும் முக்கியமான கருத்துக்கள் பெரும்பாலும் பாரதியாருக்கு உடன்பாடானவை என்று கூறலாம். ‘கல்வி கற்பிக்கும் பாஷை’ என்ற கட்டுரையில் தாகூர் வெளியிட்டிருக்கும் கருத்துக்களோ பாரதியாருக்கு முற்றும் உடன்பாடானவை என்றே சொல்லவேண்டும். தாய் மொழியிலேயே உயர் தரக் கல்வி அனைத்தும் புகட்டவேண்டும் என்பது ரவீந்திரரின் கொள்கை. இதைப் பாரதியாரும் ஒப்புக்கொண்டார் என்றே துணியலாம்.

கவி ரவீந்திரரின் தாய்மொழி ஆர்வத்திற்குப் பாரதியாரின் தாய்மொழிக் காதல் சிறிதும் குறைந்ததன்று. ஆங்கில மொழியை ரவீந்திரர் விரும்பிக் கற்றதுபோல், பாரதியாரும் ஆங்கில மொழியையும் இலக்கியத்தையும் விரும்பிக் கற்றதுண்டு. எனினும் இருவரும், ஆங்கிலமொழி போன்ற அன்னிய மொழிகள் உல்லாச யாத்திரைத் தலங்களே, நம் சொந்த வீடு அல்ல; தாய்மொழியே சொந்த வீடு என்ற கருத்துடையவர்கள்.

இப்படியெல்லாம் ஒத்த கருத்துக்களும் உணர்ச்சிகளும் உடைய கவிஞர்கள் ஒருவரையொருவர் பாராட்டிக்கொள்வது இயல்புதான். ஆனுல் ரவீந்திரநாத தாகூர் பாரதியாரை நன்ருக அறிந்திருந்தார் என்று சொல்ல முடியாது. பாரதியாரே ரவீந்திரரை நன்கு அறிந்திருந்தார். தமிழ்க் கவிஞர் வங்கக் கவிஞரின் வாழ்க்கை வரலாற்றையும் அறிந்திருந்தார்; கலைவளர்ச்சி, கவிதை வளர்ச்சிகளையும் செம்மையாக அறிந்துகொண்டார். அதனுல்தான் பாரதியார் ரவீந்திரருக்கு அஞ்சலி செலுத்தியுள்ளார்.

# 6. வாழ்க்கையும் கவிதை - வழியும்

தாகூர் குடும்பத்திற்குக் கல்வியும் உண்டு; செல்வமும் உண்டு, செல்வாக்கும் உண்டு; இவையெல்லாம் பரம்பரை யாகவே உண்டு. இக்குடும்பத்தினருக்குப் பரந்த மனப் பான்மையும் பரோபகார சிந்தையும் உண்டு. தந்தையார் மகரிஷி தேவேந்திரநாத தாகூர் என்று பேரும் புகழும் பெற்று அந்த நாளில் ஒரு பெரிய வேதாந்தியாகவும் யோக நெறிப்பயிற்சி உள்ளவராகவும் இருந்தார். இத்தகைய குடும்பத்தில் தோன்றிய தாகூர் ஒரு கவலையுமில்லாமல் கல்விப் பயிற்சி கலைப்பயிற்சிகள் பெறுவதற்கு வேண்டிய வசதிகள் எல்லாம் பெற்றிருந்தார். எனினும் சாதாரண மான பாடசாலைப் படிப்பிற்கு மேலாகப் படித்துத் தேர்ச்சி பெற்றுப் பட்டம் பதவிகள் பெறவேண்டுமென்ற ஆசை இவருக்குக் கொஞ்சமும் ஏற்படவில்லை.

தாகூர் தம் இளமை நினைவுகளைக் குறித்து எழுதி வைத் திருக்கிறார். அதனால் இளைஞர் பாரதியாரைப் பற்றி நாம் தெரிந்து கொண்டிருப்பதைக் காட்டிலும், இளைஞர் தாகூரைக் குறித்து அதிக அளவில் தெரிந்துகொள்ள நமக்கு வசதி உண்டு. பள்ளிப்படிப்பில் ஈடுபடாத கவியுள்ளம் கதைகள் கேட்பதிலும் வாசிப்பதிலும் இயற்கை அழகுகளை உற்று நோக்கி அனுபவிப்பதிலும் பெரிதும் ஈடுபட்டது. கவிதை முயற்சிக்குக் குடும்பத்தில் ஆதரவும் கிடைத்தது.

*1877*—ல் அதாவது தம் பதினேழாம் வயதில் தாகூர் மேனாட்டுக் கல்வி பெறுவதற்காக இங்கிலாந்துக்குப்

போனூர். ஆங்கிலச் சங்கீதம் பயின்றூர். சீமை வாழ்வு பிடிக்காததால் 1880ல் தாய்நாட்டிற்குத் திரும்பிவிட்டார். திரும்பியதும், ஆங்கில நூல்களைக் கவனமாய்க் கற்று வந்தார். பதினெட்டாவது வயதிலேயே இன்னிசை நிறைந்த நாடக நூல் ஒன்று எழுதிப் புகழ்பெற்றூர். குடும்பச் சொத்துக்களை மேற்பார்த்து வந்தததுடன் கலை வளர்ச்சியிலும் ஈடுபட்டுக் கவிதைகளும் நாடகங்களும் சிறு கதைகளும் எழுதி வந்தார்.

23-ம் வயதில் தாகூர் மணம் செய்து கொண்டார். இல்லற வாழ்க்கையை இலட்சிய வாழ்க்கையாக நடத்தி வந்தார். குழந்தைகளுக்குத் தாமே கல்வி கற்பிக்க விரும்பி ஒரு புதிய கல்வி முறையைப் பின்பற்றினூர். 'அடங்கி நடவுங்கள்' என்று கட்டளையிட்டு, அவர்களுக்கு நிர்ப்பந்தமாய்க் கற்பிக்க இவருள்ளம் இடம் கொடுக்கவில்லை. சுதந்திர உணர்வுடன் அவர்கள் அறிவில் வளரவேண்டும் என்று கருதினூர். இத்தகைய கல்விமுறைக் கருத்துக்களுக்கிணங்கவே 1901-ம் ஆண்டில் சாந்திநிகேதனம் நிறுவப்பட்டது.

இக்கல்விச்சாலை குருகுல முறையில் நடைபெற்றது. ஐந்து மாணவர்களுடேனேயே இது ஆரம்பமாயிற்று. இதன் வேலைகளில் தாகூரின் மனைவியாரும் சிரத்தை காட்டி வந்தார்; மாணுக்கர்களுக்குத் தாமே சமைத்து உதவுவார். அவர்களுக்கெல்லாம் ஒரு தாய்போல் பணிபுரிந்தார். இந்த நிலையில் இக்கல்விச் சாலை தொடங்கி ஓர் ஆண்டு முடிவதற்குள் அம்மையார் நோய்வாய்ப்பட்டார். கணவர் அருகில் அமர்ந்து சிகிச்சை புரிந்தார்; பணிவிடைகள் புரிந்தார். 1902ல் இவர் மனைவியார் காலமாகி விட்டார். வயது முப்பதுகூட ஆகியிருக்கவில்லை. அப்போது உயிருடனிருந்த தந்தையான தேவேந்திரநாதர் ரவீந்திரரின் குழந்தைகளின் வளர்ப்பைப் பற்றிப் பெரிதும் கவலையடைந்தார். ரவீந்திரரோ இமயமலைசென்று அல்மோராவில் வசிக்கத் தொடங்

கிஞர், அங்கே அருமைக் குழந்தைகளையும் பறிகொடுத்துத் துயரத்திலாழ்ந்தார். இப்படி முடிவுற்றது குடும்ப வாழ்க்கை.

புடமிட்ட தங்கம்போல் ர்வீந்திரரின் அறிவு கலைத் துறையிலும் கவிதைத் துறையிலும் மேன்மேலும் ஈடுபட லாயிற்று. மக்கட்சமுதாயத்தின் லட்சியங்களை விளக்கமுறச் செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன் 'விசுவ பாரதி' என்ற கலைக்கோயிலைத் தோற்றுவித்தார். ஆம்; சாந்தி நிகேதனம்தான் இப்பல்கலைக் கழகமாகப் பரிணமித்து பரிமளிப்பதைக் காண்கிறோம். ஸ்ரீநிகேதனம் என்ற பெயருடன் ஒரு கைத்தொழிற் கலாசாலையையும் அமைத்துக் கிராம முன்னேற்றத்திற்குரிய வேலைகளிலும் ஈடுபட்டார். பெண்களின் கல்விக்காக ஒரு வித்யாலயம் அமைக்கப் பட்டது.

இக்கவியரசரின் ஐம்பதாவது வயதில் தோன்றியது தான் **கீதாஞ்சலி** என்ற கவிதைத் தொகுதி. இதிலுள்ள சில பாடல்களை இவரே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். 1912-ல் உடல்நலத்தின் பொருட்டு ரவீந்திரர் இங்கிலாந் துக்குச் சென்றபோது அங்குள்ள சில கவிஞர்களுடனும் எழுத்தாளர்களுடனும் பழக நேர்ந்தது. கவிஞர் ஈட்ஸ் துரையின் தலைமையில் இவருக்கு ஒரு பாராட்டு விருந்து நடைபெற்றது. கீதாஞ்சலிப் பாடல்களின் இவரது மொழி பெயர்ப்பு ஆங்கில அறிஞர்களின் கவனத்தைக் கவர்ந்தது, கவிதையில் இது ஒரு புதுவழி என்று அவர்கள் கருதினர். அடுத்த ஆண்டிலேயே 1913-ல் இவருக்கு நோபல் பரிசு வழங்கப்பட்டது.

ரவீந்திரரின் புகழ் ஐரோப்பா எங்கும் பரவியது. எனினும் வங்க நாட்டின் பழம் பண்டிதர்கள் இவரது புதிய கவிதை வழியை ஒப்புக்கொள்ளவில்லை. கீதாஞ்சலிக்கு முன்னுரை எழுதிய ஈட்ஸ் துரையே, நான் எனது வாஞள்

முழுதும் கனவு கண்டுகொண்டிருந்த புதுயுகம் இப்பாடல்களின் இசையின்பத்தில் சித்திரிக்கப் பெற்றிருப்பதைக் காண்கிறேன். புலமையின் இணையற்ற சிகரம் இது...... தாகூரின் இப்பாடல்களில் கருத்து வளமும், ஆற்றொழுக்கு நடையும் தனிச் சிறப்பு வாய்ந்தன......, இவற்றுள் ஆழ்ந்த வேதாந்த தத்துவங்கள் காணப்படுகின்றன என்று எழுதியுள்ளார்.

அயல்நாடு மதித்துக் கௌரவித்தபின் இந்தியாவும் இவரைக் கவனித்துக் கௌரவிக்கத் தொடங்கிவிட்டது. வங்காளிகள் அதிக அளவில் பெருமைகொள்ளத் தொடங்கினர். ஆனல் கவிஞர் நிதானமாகவே இருந்தார்; மயங்கிப் போகவில்லை; கர்வம் கொள்ளவில்லை. நோபல் பரிசின் பெருந் தொகையையும்; வேறு ஊதியங்களையும் சாந்தி நிகேதனத்திற்காகவே உபயோகிக்கத் தொடங்கிவிட்டார். தீனபந்து ஆண்ட்ரூஸ் என்ற வெள்ளைக்காரரும் இவருக்கு நண்பரானர். கீதாஞ்சலியின் புகழ் மேலும். மேலும் வளர்ந்தவண்ணமாயிருந்தது. இதன் உயிர்நிலைப் பாட்டும், ரவீந்திரரின் சுதந்திரப் பொற்கனவை வெளியிடுவதுமாகிய கவிதை தேசபக்த உலகைப் பெரிதும் வசீகரித்தது.

இப்பாட்டின் மொழி பெயர்ப்பு வருமாறு :

எங்கே மனம் அச்சமற்றுத் தலை நிமிர்ந்து நிற்கிறதோ,

எங்கே அறிவு சுதந்திரமுற்று இருக்கிறதோ,

எங்கே உலகம் குலவேறுபாடுகள் என்ற குறுக்குச் சுவர்களால் துண்டு துண்டாகப் பிளக்கப்படவில்லையோ,

எங்கே சொற்கள் உண்மையின் ஆழத்திலிருந்து வெளி வருகின்றனவோ,

எங்கே சலியா முயற்சி முழுமை நோக்கித் தன் கைகளை நீட்டுகிறதோ,

எங்கே பகுத்தறிவு என்னும் தெளிந்த ஆறு வழி தவறிச் செத்தொழிந்த பழக்க வழக்கம் என்ற வறண்ட பாலைவனத்திற்குள் பாய்ந்து ஒழிந்து போகவில்லையோ,

எங்கே நீ முன் நின்று வழிகாட்டி மனத்தைச் செலுத்துகிருயோ?

அங்கே, அந்தச் சுதந்திரப் பரமபலத்திலே என் தந்தையே! எனது நாடு விழித்தெழுமாறு அருள் புரிவாயாக.

1920-ம் ஆண்டுக்குப்பின் கவிஞர் உலக யாத்திரை செய்யத் தொடங்கினர். அதற்கும் முன்பே ஆங்கில அரசாங்கத்தால் 1915-ல் தாம் பெற்றிருந்த கௌரவப் பட்டமாகிய 'ஸர்' பட்டத்தை 1919ல் துறந்து விட்டார். அந்நிய அரசின் அடக்குமுறைக் கொள்கைகளைக் கண்டிப்பதற்காக அப்படிச் செய்தார். அப்போது அரசப் பிரதிநிதிக்கு இவர் எழுதியிருந்த ஒரு நீண்ட நிருபம் நாடெங்கும் அறிஞர்களிடையே ஒரு புதிய விழிப்பையும் ஏற்படுத்தியது.

உலக யாத்திரை இவர் புகழை உலகமெங்கும் பரப்பிவிட்டது. இக்கவியரசரை ஓர் அரசரைப் போலவே உலக நாடுகள் வரவேற்றன. சுமார் பதினெரு தடவைகளுக்கு அதிகமாக இவர் கடல் யாத்திரை செய்து பல இடங்களிலும் சொற்பொழிவாற்றியிருக்கிருர். விசுவபாரதியின் லட்சியங்களையும் தம் வாழ்க்கை லட்சியங்களையும் பாரத நாட்டின் ஞானப் புகழையும் எங்கும் பரப்பினர். ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம் இவரைச் சிறப்பாகக் கௌரவித்து இலக்கிய நிபுணர் (டாக்டர்) என்ற பட்டத்தையும் சூட்டியது. மேலை நாடுகளின் விஞ்ஞான அறிவை இவர் போற்றிய போதிலும், அந்நாட்டினருடைய சில பழக்க வழக்கங்களையும் சீர்திருத்த விருப்பத்தையும் மதித்தபோதிலும், அவர்களுடைய பணச் செருக்கோ, லோகாயதப் போக்கோ இவருக்குப் பிடிக்கவில்லை. 'சாதனு' என்ற தலைப்பெயருள்ள

கட்டுரைத் தொகுதியை இவர் அமெரிக்காவிலே தயாரித்து அங்குள்ள பிரசித்தமான பல்கலைக்கழகமொன்றில் அக் கட்டுரைகளை வாசித்துக் காட்டினர்.

கலைப்பெருஞ் செல்வரான ரவீந்திரநாதரின் உள்ளம் பல்வேறு கலைச் செல்வங்களிலும் விருப்பம் கொண்டது. விஞ்ஞானம், வரலாறு, அரசியல் போன்ற அறிவுத் துறைகள் பலவற்றில் இவருக்குள்ள பயிற்சி இவர் வாக்கையும் எழுத்தையும் பெரிதும் வளமுறச் செய்தது. இவர் உருவாக்கிய இலக்கிய வகைகளில் பரப்பும் உண்டு, ஆழமும் உண்டு; இதயத்திற்கும் சிந்தனைக்கும் ஒருங்கே உணவு உண்டு. உடம்பிலிருந்து ஆவி பிரியும்வரை இவர் சிந்தித்துக்கொண்டே இருந்தார்; கலையார்வமும் கவிதை மோகமும் கொண்டவராகவே இருந்தார். கவிதைக் காதலிக்கு இவர் தம் உள்ளத்தைப் பறிகொடுத்துத் தம் வாழ்க்கையையே அர்ப்பணித்துவிட்டார் என்றே சொல்ல வேண்டும்.

கவிதைத் துறையில் விதம் விதமான சோதனைகளைச் செய்திருக்கிறார் ரவீந்திரர். இச்சோதனைகளை ஒருவகையில் மகாத்மா காந்தியின் சத்திய சோதனைகளுக்கு ஒப்பிடலாம். இவர் கவிவீரர். அவர் கர்மவீரர். இருவரும் புதுப்புது வழிகளை வகுத்துக் கொண்டார்கள்; பழமையின் சாரத்தையும் கிரகித்துக் கொண்டார்கள். காந்தியடிகளின் செயற்கருஞ் செயல்களைப்போல் தாகூரின் கற்பனைகளும் பொதுவாக மனித வாழ்க்கையும், சிறப்பாக நம் தேசீய வாழ்க்கையையும் வளமும் வனப்புமுறச் செய்திருக்கின்றன எனலாம். எனவே 'மனிதருள் மனிதர்' என்று தாகூர் காந்தியடிகளை மதித்ததிலும் வியப்பில்லை; காந்தியடிகள் குருதேவர் என்று தாகூரைப் போற்றியதிலும் வியப்பில்லை- இவரும் இந்தியாவுக்குச் சிறப்புப் பணிகள் புரிந்ததுடன் கிழக்கும் மேற்கும் சந்தித்து உலகம் புது வளர்ச்சி பெறுவதற்குரிய அரும்பெரும் பணிகளையும் மேற்கொண்டவர்களே.

ரொமேன் ரோலந்து என்ற உலகப் புகழ்பெற்ற பிரெஞ்சு அறிஞரும் தம் இலக்கியப் புலமைக்காக நோபல் வெகுமதி பெற்றிருந்தவர். இவர் காந்தியடிகளின் வாழ்க்கை மற்றிய ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையின் தலைப்பிலே, 'ஓ தாகூர்! ஓ காந்தி!—நீங்கள் இருவரும் சிந்துவும் கங்கையும் போலக் கிழக்கையும் மேற்கையும் தழுவி அருள் செய்கிறீர்கள். மேற்கு வீரச் செயலின் ஓர் அவல நாடகத்தையும், கிழக்கு ஓர் ஒளிப் பெருங் கனவையும் நினைவூட்டுகின்றன. இந்தச் செயல் மோகமும் ஒளிக்கனவும் பரமபத நாதனின் இல்லத்தைச் சேர்ந்தவைதாம். இத்தகைய உலகத்தைப் பகைமையும் கொடுமையும் உழுது தள்ளுவதைக் காண்கிறோம். ஆனால் நீங்கள் கடவுளுடைய அருள் விதைகளை இங்கே விதையுங்கள்; விதைத்துவிடுங்கள்!' என்று எழுதியுள்ளார்.

'தீர்க்க தரிசனமுள்ள அறிவுச் சுடர்' என்றும், தியாக வாழ்க்கையின் உறையுள் என்றும் ரவீந்திரரையும் காந்தியடிகளையும் முறையே குறிப்பிடுகின்றார் ரொமேன் ரோலந்து. இவர்கள் இருவரையும் ஆண்டவன் அண்மையில் இவ்வுலகிற்கு அனுப்பிய தூதர்கள் என்கிறார். இரு பெரியோரும் வெவ்வேறு துறைகளில் வேலை செய்த போதிலும் பொதுவானதொரு புதுமைப் பெரும் பணியின் இரு கூறுகளே அவ்வேலைகள் என்கிறார். தாகூர் சமய சமூக வேறுபாடுகளைக் கடந்த கவி—ஞானி; குன்றாத நாட்டுப் பற்றும் மனித சமுதாயப்பற்றும் உள்ளவர். காந்தியடிகளோ அரசியல்—ஞானி; கவிதையிலும், அரசியல் முன்னேற்றத்திற்கும் சமுதாய முன்னேற்றத்திற்கும் பொதுவாக வாழ்க்கை முன்னேற்றத்திற்கும் இன்றியாமையாத கருத்துக்களைக் காண விரும்பினார்.

தீனபந்து சி.எப். ஆண்ட்ரூஸ் ஒரு சமயம், எனது குருதேவர் மூவர்: ஒருவர் சாந்திநிகேதனத்தில் வாழ்கிறார்; ஒருவர் சபர்மதி ஆசிரமத்தில் வாழ்கிறார்; எனது மூன்றாவது

குருமணியிடம் நான் நேரில் தீட்சை பெறவில்லை; அவர் புதுச்சேரியில் தவம் செய்கிறார்? என்று குறிப்பிட்டார். இவர்கள் மூவரையும் அரசியல்—ஞானிகள் என்று கூறுவதிலும் தவறில்லை. மூவரும் உத்தம தேச பக்தர்களே. எனினும் காந்தியடிகளின் வாழ்க்கைதான் அரசியல் துறைக்கே அர்ப்பணிக்கப்பட்டது. ஒரு காலத்தில் அரசியல் போராட்டத்தில் அதிதீவிரமாக ஈடுபட்டிருந்த அரவிந்த கோஷரும் நாளடைவில் அவ்வாழ்க்கையில் தமது ஆற்றலைப் பறிகொடுக்க விரும்பாது பரமயோகியாகவும், மிகச் சிறந்த தத்துவஞானியாகவும் பரிணமித்து விட்டார். கவிதாகூரும் பல சந்தர்ப்பங்களில் தீவிர அரசியல் கருத்துக்களை வெளியிட்டதுண்டு. மாகாண அரசியல் மாநாடு ஒன்றில் தலைமை தாங்கியதுமுண்டு. சுதேசி இயக்கத்தில் தாகூர் தீவிரமாய்க் கலந்து கொண்டிருந்தவர்தாம். எனினும் இவர் சாந்தி சாந்திநிகேதன மாணவர்களையும் ஆசிரியர்களையும் அரசியல் போராட்டங்களில் தலையிட அனுமதிக்கவில்லை, பரபரப்பான அரசியல் இயக்கங்களைக் காட்டிலும் பகைமை உணர்ச்சிக்கும் தன்னலத்திற்கும் இடங்கொடாத கல்வி—இயக்கமே அதிமுக்கியமானது என்பது இவர் கருத்து. எனவே மகாத்மாவின் சாத்விகக் கொள்கைகளை இவர் பெரிதும் பாராட்டிய போதிலும், தாம் அரசியல் துறையிலிருந்து விலகி நின்றே கல்விப் பணியும் கவிதைப் பணியும் ஆற்றிக் கொண்டிருந்தார்.

கதர் ஆடையின் பயனையும் பொருளையும் குறித்துக் கவி தாகூருக்கும் மகாத்மா காந்திக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டது. கதரின் பயனையும் சிறப்பையும் ரவீந்திரர் மறுத்ததாகத் தெரியவில்லை; ஆனால் அன்னிய ஆடைகளை நெருப்பிலிடுவது பகைமை யுணர்வைத் தூண்டும் என்று நம்பினார். ராட்டினம் சுற்றுவதால் மட்டும் நாட்டை வாழ்விக்க முடியும் என்று காந்தியடிகளின் சீடர்கள் சிலர் கருதியதை இவர் வன்மையாக மறுத்தார்.

ஆடுராட்டே! சுழன்று ஆடுராட்டே!
சுழன்று சுழன்று சுழன்று ஆடுராட்டே!

என்ற 'கவிதை'யே போதும் என்று சொல்லக் கூடிய 'பொன்மனம்' தாகூருக்கு இல்லை. இவருக்கும் காந்தியடிகளுக்கும் இக்கருத்து வேற்றுமை காரணமாக விவாதம் ஒரு காலத்தில் பலமாக நடந்தது. யார் சரி, யார் தப்பு?—யாரே சொல்ல முடியும்? அழகே உண்மை என்றார் ரவிந்திரர்; காந்தியடிகளோ உண்மையே அழகு என்றார். அவ்வளவுதான் வித்தியாசம் என்றே எனக்குத் தோன்றுகிறது. காந்தியடிகளின் சத்தியாக்கிரகக் கொள்கை, அருள் நெறிக் கொள்கை, ஹரிஜனத் திருப்பணி, கிராம சேவை ஆகியவை தாகூரால் போற்றப்பட்டன.

தாகூரின் சீர்த்திருத்தக் கருத்துக்களும் சமய—சமுதாயக் கொள்கைகளும் இவரை முற்போக்குடையவராகவே காட்டுகின்றன. எனினும் இவர் அரசியல் பிரசாரத்தில் தம்மை இழந்து விடாதது போல் ஆசார சீர்திருத்த இயக்கத்திலும் தம் மேதையை இழந்துவிட விரும்பவில்லை. அறிவுச் சுதந்திரத்திற்காகவும் இவர் கவிதைகள் வாயிலாக மன்றாடினர், போராடினர். காந்தியடிகளைப் போல் இவரும் உண்மையாகவே ஆழ்ந்த சமயப் பற்றுள்ளவர்தாம்; இந்து தர்மத்தின் வேத வேதாந்தவேர் கொள்கைகளில் ஊன்றிய கருத்தும் சிறத்தையும் உடையவர். எனினும் கவிதையே இவர் சமயம், இவர் தருமம் என்றுதான் சொல்லவேண்டும். கவிதையே ரவிந்திரரின் செயல்திறன்! அரசியல் பணியே காந்தியடிகளின் கவிதை.

காந்தியடிகள் பன்முறை சாந்திநிகேதனத்திற்கு விஜயம் செய்ததுண்டு. விசுவபாரதியின் நிதிக்காக அறுபத்தைந்தாயிரம் ரூபாய் வசூலித்துக் கொடுத்ததும் உண்டு. இந்திய நாகரிகத்தின் பெருமையை இயன்றமட்டும் பிற நாடுகளுக்குக் கல்வி வாயிலாக வழங்கி வந்த விசுவபாரதியில் நடைபெற்று வந்த வேலைகளையெல்லாம் கருத்தூன்றிக்

கவனித்து மகாத்மா பெரிதும் பாராட்டியிருக்கிருர். காந்தியடிகளுக்கு 'மகாத்மா' என்ற பட்டத்தை முதல் முதல் வழங்கியவரே கவிதாகூர்தான். இப்பட்டத்தைக் காந்தியடிகள் விரும்பியதே இல்லை. நான் 'மகாத்மா இல்லை, அற்ப ஆத்மாதான்!' என்றே காந்தியடிகள் சொன்ஞர். எனினும் கவிஞர் அளித்த பட்டம் காந்தியடிகளாலும் உதறித்தள்ள முடியாதபடி நிலைத்து விட்டது. அரசாங்கம் அளித்த 'ஸர்' பட்டத்தை ரவீந்திரர் உதறித் தள்ளியதைப் போல் இவர் அளித்த மகாத்மா பட்டத்தைக் காந்தியடிகளால் தள்ளிவிட முடியவில்லையே!

'குருதேவர் எல்லா நாடுகளுக்கும் உரிய பெரியார்' என்று தாகூரைப் பாராட்டினர் காந்தியடிகள். 'காந்தியடிகளே உலகம் போற்றும் உத்தமர்' என்ருர் ரவீந்திரநாதர். இது பரஸ்பர முகஸ்துதி அல்ல. உள்ளது உள்ளபடியே ஒருவருக்கொருவர் தெரிவித்துக் கொண்ட உண்மை மதிப்பேதான். கீதாஞ்சலியிலிருந்து ஒரு செய்யுட் பகுதியை மகாதேவ தேசாய் சொல்லிக் காட்டியதும் காந்தியடிகள், 'அவர் (தாகூர்) பெரிய ரிஷி; அவருக்கு நாம் எவ்வளவு கடமைப்பட்டிருக்கிருேம்' என்பதை இன்னும் உணர்ந்து கொண்டோமில்லை என்று கூறி வியந்தார். தாகூர் உள்ளத்திலும் மகாத்மாவைக் குறித்து இத்தகைய சிந்தனைகள் பன்முறை எழுந்தன.

பத்தொன்பதாவது நூற்ருண்டின் இறுதியில் 'நூற்ருண்டின் அஸ்தமனம்' என்று ஒரு கவி பாடினர் ரவீந்திரர். அதில் பாரத மக்களே! விழித்துக் கொள்ளுங்கள். என் சகோதரர்களே! நீங்கள் எளிமையான தூய ஆடைகளுடன் பெருஞ் சக்தியும் ஆணவமும் கொண்டவர்களின் முன்னிலையில் தலை நிமிர்ந்து நில்லுங்கள்; அப்படி நிற்க வெட்கப்பட வேண்டியதில்லை. உருவத்தில் பெரிதாய்க் காண்பனவெல்லாம் பெருமை மிகுந்தவை அல்ல. செருக்கும் கர்வமும் நிலைத்திருப்பவை அல்ல என்பது அப்பாட்டின் சாரம்.

காந்தியடிகளின் அரசியல் அறப்பணிகளின் விளைவாகத் தூய கதராடை உடுத்தி அன்னிய ஆதிக்கத்தை எதிர்த்துத் தலை நிமிர்ந்து நின்ற தொண்டர் கூட்டத்தை ஒரு தீர்க்க தரிசனமாகக் கண்டு பாடியது போலிருக்கிறதல்லவா ரவீந்திர நாதரின் இப்பாட்டு?

இனி இந்தக் கவிஞாயிற்றின் அஸ்தமனம் குறித்துக் கொஞ்சம் தெரிந்து கொள்வோம். தசரதன் இறந்து போய்விட்டான்; உண்மைக்காகத் தன் உயிரைப் பலி கொடுத்து விட்டான்; வாய்மை என்ற படர்கொடிக்குக் கொழு கொழும்பாக இருந்த வீரமன்னன். இதை உள்ளத்தில் கொண்டு, இந்த மரண நிகழ்ச்சியை அறியாத இராம லட்சுமணர் கண்ட ஒரு சூரியாஸ்தமனத்தைக் கம்பன் வருணித்திருக்கிறான். எப்படி உதயம் செய்தான் இந்தச் சூரியன், எப்படியெல்லாம் ஒளி பொழிந்து வெற்றிப்புகழ் சூடி உலகை வாழ்வித்தான்; கடைசியாக மறைந்து போகிறான்!—ஆனால் இந்தச்சூரியனுக்கும்மறைவு உண்டோ? இப்படி அதிசயித்துப் பாடுகிறது கவியுள்ளம்.

விரிந்து கிடந்த இருட் பகையை ஓட்டிச் சைதிகளை வென்று ஒளிமயமாக்கி உலகத்திற்கு மேல் நின்று ஆணை செலுத்தி மறைந்த தசரத சக்கரவர்த்தியின் வாழ்க்கையை நினைவூட்டுகிறது சூரியனின்போக்கும் என்பதை உய்த்துணர வைத்துப் பாடியிருக்கிறான் கம்பன். சத்தியவீரனின் மறைவும் மரணமாகுமா?—ஓர் அழகிய சூரியாஸ்தமனம்தானே! மரணத்தைத் தியாஜமார்கக்கொண்டு மக்கள் உள்ளம் புகுந்து வளர்பவன்தானே சத்தியநெறியில் உயிர்த்தியாகம் செய்தவன்! இது கம்பனின் கவி உள்ளம்.

இந்த வருணனை கவி ரவீந்திரநாதரின் மறைவுக்கும் பொருந்துவதுதான். விரிந்து கிடந்த அறியாமை இருள் என்ற பகையைத் தம் கவித்திறத்தால் சிறிது சிறிதாக ஓட்டி வெற்றி கண்டவர் ரவீந்திரநாதர். இத்தகைய திக்கு

விஜயம்தான் இவரது உலக யாத்திரையும். இவர் எல்லாருக்கும் மேலாக நின்ற நிலையும் ஒரு ஞான சூரியனின் நிலைதான். சூரியன் மேலே நிற்கிறனே! என்று பொறுமைப் படுவதில் பயனோ பொருளோ உண்டா?

இத்தகைய ரவீந்திர கவிச்சக்ரவர்த்தி மறைந்தாரென்றால், அதை மரணம் என்று எப்படிச் சொல்லி வருந்துவது. பக்தர்கள் முன் மரணம்தான் மரித்துப் போகிறது?— என்று கூறுவதுண்டு. அழகுத் தெய்வத்தின் அருமந்த பக்தருள் ஒருவரான தாகூர் விஷயத்திலும், 'சாவுதான் செத்துப் போயிற்று; இவர் சாகவில்லை, சாகவே இல்லை; சாகா வரம் பெற்று' மக்கள் உள்ளம் புகுந்து இன்றும் வாழ்ந்துகொண்டே இருக்கிறார்.

ஆனால் மக்களின் புறக்கண்களுக்கு ரவீந்திரரின் கொடும் பிணியும் சீர்குலைந்த உடலும்தான் தோற்றமளித்தன. உயிர் சோர்ந்தபோதிலும் அறிவுச்சுடர் மங்கவில்லை என்பது இவர் கவி பாடிக்கொண்டே இருந்ததிலிருந்து தெரிய வந்தது. இறுதி நாட்களிலும் தேசபக்தி கொழுந்து விட்டெரிந்தும் இதற்கு இவர் படுத்த படுக்கையிலிருந்தே இந்தியா மீது நல்லெண்ணம் பெற்றிராத ஓர் அன்னிய மாதின் பகிங்கிரக் கடிதத்திற்கு இவர் எழுதிய மறுமொழியே சான்றாகும். அந்த கடிதத்தில் அந்த மாது இந்தியர்களின் அறியாமையையும் கோழைத் தனத்தையும் பரிகசித்திருந்தார். இந்தியாவின் அந்த நிலைமைக்குக் காரணம் அன்னிய ஆட்சியின் விபரீதப் போக்கே என்று ஆணித்தரமாகப் பதிலளித்தார் கவி ரவீந்திரநாதர்.

1941-ல் ஆகஸ்டு ஏழாம் நாள் இவர் உடல்நிலையில் அபாய அறிகுறிகள் தோன்றிவிட்டன. போதமற்ற நிலைமையும் ஏற்பட்டுவிட்டது. அன்று நடுப்பகலில் தம் எண்பதாவது வயதில் கவி ரவீந்திரர் உயிர் துறந்தார், வேத கீதங்களின் முழக்கத்திற்கிடையே பிரேத ஊர்வலம் நடை

பெற்றது கல்காத்தாவிலேயே. தூய மலர்கள் தூவப் பட்டன. கங்கை பிரவாகத்துடன் போட்டியிடுவது போல் மக்கட்பெருக்கு, நதி ஓரமாக நெருக்கிக் கொண் டிருந்தது. அந்த மயானக் கரையில் நிற்கவும் இடமில் லாததால் சிலர் படகுகளில் அமர்ந்தும் இறுதித் தரிசனம் செய்யக் காத்திருந்தனர். சந்தனக் கட்டைகளாலும் வாசனைத் திரவியங்களாலும் அமைந்திருந்த சிதையில் தகனக்கிரியை நடைபெற்றது.

1921-ம் ஆண்டு செப்டம்பர் 11-ம் நாள் மறைந்து போன தமிழகக் கவிஞரைக் குறித்துச் சுதேசமித்திரன் பத்திரிகை 'தென்னாட்டுக் கவிச் சக்ரவர்த்தி சுப்பிரமணிய பாரதியார் காலமானார்' என்று பெரிய எழுத்துக்களில் தலைப்புக் கொடுத்துத் தலையங்கம் எழுந்தியிருந்தது. ஆனால் வறுமையிலே வாழ்ந்து வறுமையிலே மாண்டு போன கவிஞருக்குச் சென்னை மாநகரம் இறுதி மரியாதைகளையும் தக்கமுறையில் செலுத்தத் தவறி விட்டது. இவர் நோய் வாய்ப்பட்டு சுமார் மூன்றுமாத காலம் வருந்தினார்; அப்போதும் வசதி கிடையாது; சரியான வைத்திய வசதி கிடைத்தது என்றும் சொல்ல முடியாது. 'பாரதியாரின் பூத உடலை அடக்கம் செய்வதற்குப் போதிய பணம் அவரது வீட்டார்களிடம் இல்லை என்றும், சில பக்தர்களின் பண உதவியைக் கொண்டுதான் உடலை அடக்கம் செய்ய முடிந்தது என்று பாரதியாரின் பக்தரும் சிறந்த தேசபக்தரு மான ஒருவர் என்னிடம் சொன்னார்' என்று அறிஞர் வ.ரா. 'மகாகவி பாரதியார்' என்ற தமது நூலில் கூறி, தமிழர்கள் தங்கள் உள்ளங்களை இப்பொழுதாவது சோதித் துப் பார்ப்பார்களாக! என்று திரு வ. ரா. கூறியிருக்கிறார்.

புறக்கண்களுக்குப் பாரதியாரின் மறைவு தாகூரின் மறைவைப்போல் பிரசித்தமாக மக்களை வசீகரிக்கவில்லையே என்றுதான் தோன்றும். உண்மையில் இதுவும் ஒரு வீர மரணம்தான், கவிச்சக்கரவர்த்தியின் பிரிவுதான், ஓர்

அற்புத சூரியாஸ்தமனம்தான். பாரதியாரும் அறியாமை என்ற இருட்பகையைத் தமிழகத்திலிருந்து விரட்டப் பாடியவர்தாம். தாகூரைப்போல் உலக யாத்திரை செய்யா விட்டாலும், இவரையும் திக்கு விஜயம் செய்த ஒரு கவிச்சக்கரவர்த்தியாகவே தமிழகம் 'தற்சோதனை செய்து பார்த்தபின் மதிக்கத் தொடங்கிவிட்டது' இவரும் தாகூரைப்போல் அமரர் ஆகிவிட்டார்; சாவை வியாஜமாகக்கொண்டு மக்கள் உள்ளம் புகுந்து வளர்ந்துகொண்டு தான் இருக்கிறார்.

*           *           *

உண்மைக் கவிஞருக்கு வாழ்க்கையே கவிதை, கவிதையே வாழ்க்கை என்று கூறுவதுண்டு. எனினும்,

கவிஞன் நாம் தேடும் இடங்களில் எல்லாம் அகப் படான். வாழ்க்கை வரலாற்றில் நிச்சயமாகக் கவிஞனைக் காண்பது அரிது என்ற தாகூரின் செய்யுளடிகள் ஆழ்ந்த கவனத்திற்கு உரியனவே. வாழ்க்கை வரலாறு பெரும் பாலும் வெளித் தோற்றங்களையே எடுத்துக்காட்டுவதால் கவி தாகூர் இப்படிக் கூறியுள்ளார் என்று கருதலாம்.

''ஆனால் என்னுடைய சுகதுக்கங்களிலும் என்னைக் கண்டறியீர்!...துக்க வெள்ளத்திலும் சந்தோஷ வெறியிலும் என்னைத் தேடி மோசம் போக வேண்டாம்!'' என்றும் இவர் கூறியிருக்கிறார். இதுவும் நம் ஆழ்ந்த சிந்தனைக்கு உரியதுதான் கவிஞனுடைய உண்மையான வளர்ச்சி வெளித்தோற்றங்களுக்கும் சாதாரணச் சுகதுக்கங்களுக்கும் அப்பாற்பட்டது என்று கருதும் ரவீந்திரநாதர் கவிஞனுடைய உண்மையான வாழ்க்கையைக் கவிதைகளில் புலனாகும் ஆழ்ந்த அனுபவங்களிடையேதான் காணமுடியும் என்பதைக் குறிப்பாக உணர்த்துகிறார்.

வீட்டுக் கிளியும் காட்டுக் கிளியும் சந்தித்ததாகவும், 'கூட்டிலே சுகமாய்க் காலம் கழிக்கலாமே என்று அடிமைக் கிளி கூறியதாகவும் இறக்கைகளை விரிக்க வசதி இல்லையே என்று சுதந்திரக்கிளி சொன்னதாகவும் 'அந்தோ, வெளியே வானத்தில் தொத்திக்கொள்ள எனக்கு எங்கே இடம் கிடைக்கும்?' என்று கூட்டுக்கிளி பெருமூச்சு விட்டதாகவும் ஒரு கவிதை பாடியிருக்கிறார் கவி தாகூர். இதில் இவரது இளம் பருவ வாழ்க்கை வரலாறுகளில் காண்பதைக் காட்டிலும் சுதந்திர உணர்ச்சியை ஆழமாய்க் கண்டுகொள்ளலாம் அல்லவா?

இப்படியே வாழ்க்கையின் பல படிகளையும் வளர்ச்சி நிலைகளையும் அனுபவக் கடலில் முத்துக்குளித்த செய்திகளையும் ரவீந்திரரின் கவிதை—வழியிலே கண்டு களிப்புறலாம்.

# 7. வாழ்க்கையும் ஆன்ம சரிதையும்

உண்மைக் கவிகளின் ஆன்ம சரிதையை இவர்கள் பாடிய கவிதைகளிலே தான் காணமுடிகிறது; கவிதையைத் தவிர வேறு எந்த பாஷையில்தான் எப்படி வெளியிட முடியும், உத்தமக் கவிகளான மகாகவிகளின் ஆன்ம சரிதையை? பாரதியாரின் ஆன்மசரிதைக் குறிப்புக்களை ஏற்கெனவே நாம் ஒருவகையில் அவர் பாடல்களில் காண முயன்றோம். இனி நாம் ரவீந்திர நாதரின் கவிதைகள் சில வற்றில் இவரது ஆன்ம சரிதக் குறிப்புக்களைக் காண முயல்வோம்.

கீதாஞ்சலியிலுள்ள பாட்ல்களைப் பலரும் பிரசித்த மாக அறிவார்கள். இப்பாடல்களில் சிறப்பாக ரவீந்திரரின், ஆழ்வாராதியரை ஒத்த, பக்தி உள்ளத்தைக் காண்கி கிறோம். இவற்றிலும் தேசிய மனப்பான்மையை மட்டும் காணமுடியாது. கிழக்கையும் மேற்கையும் நோக்கி, நோக்கி உலகத்திற்கெல்லாம் பொதுவான ஆறுதலையும் ஆனந்தத்தையும் அளிக்கவல்ல ஒரு ஞான சொரூபத்தைத் தான் தரிசிக்கிறோம். இந்த சொரூபத்தை அதிக அளவில் வேறு சில கவிதைகளில் காணமுடியும் என்று எனக்குத் தோன்றுகிறது.

பாப்பாப் பாட்டிலும் பாரதியாரின் சொரூபத்தை ஓர் அளவு பார்க்கத்தான் செய்கிறோம். தாகூரும் குழந்தை களைப் பற்றிப் பாடியிருக்கிறார். ஆனல் அவை பாப்பாப்

பாட்டைப்போல் மழலைப்பாடல்கள் அல்ல. பாரதியார் குழந்தையோடு குழந்தையாகி அந்தக் குழந்தை மொழி களிலேயே குலாவுவது போல் அமைந்திருக்கிறது பாப்பாப் பாட்டு. ரவீந்திரநாதரின் குழந்தைப் பாடல்களோ குழந்தைகளைப் பற்றிக் கள்ளங்கபடமற்ற குழந்தையுள்ளம் படைத்த இக்கவிஞர் வெளியிடும் அழகிய கருத்துக்களும் கற்பனைகளுமாகும். இப்பாடல்களின் கருத்துக்கள் நம்மை எப்பொழுதும் குழந்தைகள் உள்ளங்களாகிற மலர்க் குவியலின் உள்ளே செலுத்திவிடுகின்றன என்கிருர், திரு கி. சந்திரசேகரன் தமது 'ரவீந்திரநாததாகூர்: வாழ்க்கை யும் கவிதையும்' என்ற புத்தகத்திலே.

பாரதியாரோ தம் கருத்துக்களால் நம்மைக் குழந்தை களின் உள்ளங்களில் செலுத்தவில்லை. தாமே குழந்தை யோடு குழந்தைபோல் நின்று குழந்தைப் பேச்சில் குழந்தை களுக்குப் புரியும் கவிதைகளையே வெளியிடுகிருர். 'உதயம்' என்ற கவிதையின் தொடக்கத்திலே குழந்தை, 'எங்கிருந்து வந்தேன் நான்? அம்மா? என்னை எங்கே கண்டெடுத்தாய்?' என்று கேட்கிறது. பெரும்பாலும் தாய் 'உன்னைத் தவிட் டுக்கு வாங்கினேன்' என்று சொல்லுவதைத்தான் நாம் தமிழ்நாட்டில் கேட்டிருக்கிருேம். ஆனல் தாகூரின் கவிதை யில் தாய் என்ன சொல்லுகிருள்?

குழந்தையை வாரி எடுத்து மார்போடு அணைத்துக் கொள்கிருள். பாதி அழுகையும் பாதிச் சிரிப்புமாய்க் குழந் தையின் கேள்விக்குப் பதில் சொல்லுகிருளாம். 'என் இதயத்தின் ஆழத்தில் அதன் ஆசையைப் போலவே நீ பதுங்கிக் கொண்டிருந்தாய்!' என்று தொடங்குகிருள். தன் பபாச்சி விளையாட்டில் இக்குழந்தையைக் கண்டதாகவும் தெய்வப் பதுமைகளை மண்ணில் பிடித்துக் கலைக்கும்போது குழந்தையையே உருவாக்கவும் அழிக்கவும் முற்பட்டதாக வும் சொல்லுகிருள்.

இன்னும் இந்தத் தாய் எப்படி எல்லாம் வேதாந்தம் பேசுகிருள் பாருங்கள்! 'எங்கள்குலத் தெய்வத்தைவைத்துத் தொழுகையில் உன்னைப் பூசித்தேன் அப்பா!' என்று கொஞ்சுகிருள் குழந்தையிடம். 'என் ஆசைகளிலெல்லாம், என்னைப் பெற்றதாயின் உயிரிலும் கூட நீ உயிர் பெறக் கண்டேன்! என்று விஞ்ஞானம் பேசுகிருள், வேதாந்தம் பேசுகிருள்.

தன் கன்னி உள்ளம் இதழ் விரிக்கையில் அதன் நறுமணம் போல அதைச் சுற்றி வந்ததாம் குழந்தை. இதற்கும் மேல் ஒரு வேதாந்த அலை வருகிறது இந்தப் பாட்டிலே—ஒரு பெருந்தத்துவ அலை: 'உன் மலர் போன்ற உடம்பின் எழிலும் ஒளியும் என் உடம்பெல்லாம் பரவி உதயசூரியனைக் காட்டிக் கொடுக்கும் அருணோதயம் போல் ஒளியிட்டனவே!' அருமையான குழந்தை தத்துவக் கதைதான் இது; ஆனல் குழந்தைக்குப் புரியும், அல்லது குழந்தைக்குப் புரிவது போலத் தோன்றும் கவிதையுமல்ல.

அலைகளைப் பார்க்கிறது குழந்தை; பேசத் தொடங்குகிறது—அலைகளோடு அல்ல, அலைகளில் உள்ளவர்களோடு! காலைதொட்டு மாலைப்பொழுது வரை அவர்கள் பாடுகிருர்களாம்; எங்கெங்கேயோ போய் வருகிருர்களாம், திரிகிருர்களாம். எப்படி உங்களிடம் நான் வருவேன்? என்று குழந்தை கேட்க, 'கடற்கரையோரமாக வா; கண்ணை மூடிக் கொள்; அலைகள் அப்படியே உன்னை ஏந்திக் கொண்டு போகும்' என்று அலை மனிதர்கள் பதில் சொல்லுகிருர்களாம். 'அம்மா தேடுவாளே' என்று குழந்தை சொல்ல அலைகள் புன்னகையுடன் குதித்துப் போய்விட்டனவாம்.

இப்படிச் சொல்லும் குழந்தைக்கு இது ஒரு விளையாட்டே என்பதும் தெரிகிறது. இதைவிட அழகியதொரு விளையாட்டும் எனக்குத் தெரியும் என்று அம்மாவிடம் சொல்லிவிட்டு, அம்மா, நான் அலை; நீ கரை!

உருண்டு உருண்டு சிரித்து வந்து விழுகிறேன் உன் மடியிலே என்கிறது குழந்தை. 'நானும் நீயும் எங்கே இருக்கிறோம் என்பதை உலகத்தில் ஒருவரும் அறியார்' என்று குழந்தை கூறுவதாக முடிகிறது பாட்டு. இத்தகைய பாடல்களில் குழந்தையைப் பற்றிய வசிகரமான கருத்துக்களைத்தான் காண்கிறோம். 'குழந்தைக் கவிதை' என்று சொல்லும்படி அவ்வளவு இயற்கையாக இத்தகைய பாடல்கள் அமைந்திருக்கவில்லை என்றுதான் தோன்றுகிறது.

உண்மை என்னவென்றால், இவை தாகூரின் தற்சரிதையை ஒருவாறு புலப்படுத்தும் கவிதைகளே. தாகூருக்குக் குழந்தைகள் மீதுள்ள அபிமானமும், இவரது குழந்தைப் பருவ நினைவுகளும், இக்கவிஞரது குழந்தை உள்ளமும் கைகோத்துக் களிநடம் புரியும் அற்புதக் காட்சியை இத்தகைய கவிதைகளில் காண்கிறோம். குழந்தை—மனோபாவத்தையும் ஒருவாறு காணத்தான் செய்கிறோம்; ஆனால் இதுவும் முதிர்ந்த கவிதை—மனப்பான்மையின் பகுதிதான். பொதுவாகக் குழந்தைகளைப் பற்றிய தாகூர் பாடல்களில் பெரியாழ்வார் முதலான கவிகள் குழந்தையைக் குறித்துப் பாடியிருப்பவை போன்ற வாக்கையும் மனோபாவத்தையும் காண்பதற்கில்லை என்றே சொல்ல வேண்டும்.

இனி, தாகூரின் மிகவும் பிரசித்தமான பாடல் ஒன்றை நோக்குவோம். பைத்தியக்காரன் ஒருவன் கதையைக் கூறுவதுபோல் அமைந்திருக்கிறது இப்பாட்டு. உடம்பு இளைத்துத் துரும்பாகிவிட்டது. தலைரோமம் சடையாகி விட்டது. வாய்மூடி மௌனமாகவே இருக்கிறது. மின் மினிபோல மினிரும் கண்களுடன் பைத்தியக்காரன் தேடிக் கொண்டே போகிறான். எதைத் தேடுகிறான்? ஏன் தேடு கிறான்? 'ஸ்பரிச வேதியை'த் தேடுகிறான் என்கிறார் கவிஞர். அதாவது, தொட்டதைத் தங்கமாக்கும் ஒருவகை கல்லைத் தான் தேடுகிறானாம்.

கடற்கரையில் தேடுகிருன். எதிரே முடிவற்ற கடல் ஓலமிடுகிறது; ஓலமிட்டுக் கொண்டே இருக்கிறது. அலைகள் தங்கள் பாஷையில் என்ன என்னவொபேசுகின்றன, தொண தொணவென்று. அவை சிரிக்கவும் செய்கின்றன. அவை என்ன பேசுகின்றன; ஏன் சிரிக்கின்றன? தாங்கள் சேமித்து வைத்திருக்கும் இரத்தினங்களைப் பற்றி பேசுகின்றனவாம். அந்த பாஷை மக்களுக்குப் புரியவில்லை, அந்த இரகசியம் பரசியமாகிவிடவில்லை. 'என்னே மதியீனம்!' என்றுதான் அலைகள் பரிகாசச் சிரிப்புச் சிரிக்கின்றனவாம்.

புத்திசாலியான மக்களுக்கேபுரியவில்லையே-பையித்தியக் காரனுக்கு எப்படிப்புரிந்துவிடும்? எனினும் தேடுவதைவிட்டு வைக்கவோ நிறுத்தி வைக்கவோ மனமில்லாமல் தேடிக் கொண்டே இருக்கிருனும். தேவையை உயிராசையாக்கிக் கொண்டுவிட்டான். தனியே கடற்கரையில்தான் காணுத கல்லைத் தேடித்தேடித் திரிகிருன், அந்தப் பித்தன்! இதற்கு இரண்டு உபமானங்கள் காட்டுகிருர் கவிஞர். 'அடையமுடி யாததை எட்டிப் பிடிக்கலாமா என்று கடலலை கொந்தளிக் கிறதாம். கிட்டாத குறிக்கோளை வைத்துக்கொண்டு வானச் சுடர்கள் சுழன்று கொண்டிருக்கின்றனவாம். இந்த இரண்டு உவமைகளுடன் அந்தப் பித்தன் ஸ்பரிச வேதியை நீண்ட கடற்கரையில் தேடித் தவிப்பதைக் காட்டுகிருர் கவிஞர்.

தான் விரும்பிய கல்லை இன்னும் கண்டுபிடிக்க முடிய வில்லையே என்றுதான் மேலும் மேலும் தேடிக் கொண்டிருக் கிருன் பையத்தியக்காரன். ஒரு நாள் மாடு மேய்க்கும் சிறுவன் ஒருவன் எதிரே வந்து நின்று, 'இடுப்பில் பொற் சங்கிலி அணிந்திருக்கிறீரே, அது எங்கே ஐயா கிடைத்தது உமக்கு?' என்று கேட்கிருன். பைத்தியக்காரன் திடுக்கிட்டு நோக்குகிருன்—தன் சங்கிலியைத்தான். 'இந்த மாடு மேய்க் கும் பிள்ளை ஏன் அப்படிச் சொல்லுகிருன்?'

'நான் இடுப்பில் வைத்திருந்தது இரும்புச் சங்கிலி தானே' என்ற நினைப்புடன் இப்போது பார்த்தவனுக்கு

ஒரே ஆச்சரியமாக விட்டது ஆம்; இரும்பு தங்கமாக மாறி யிருக்கிறது. எப்போது ஏன் மாறியது?-எதனுல்? இப்படி இதைத் தங்கமாக்கிய அந்த ஸ்பரிச வேதிக்கல் எங்கே? 'எங்கே கண்டேன்? ஐயோ! எங்கோ எறிந்துவிட்டேனே'— அவன் தலையில் அடித்துக் கொண்டான்.

உண்மையில், கற்களைப் பொறுக்கிப் பொறுக்கி எடுத்து எடுத்துச் சோதித்துப் பார்ப்பதற்காகத்தான் இடுப்பில் அந்த இரும்புச் சங்கிலியை வைத்துக் கொண்டிருந்தான். தான் எடுத்த ஒவ்வொரு கல்லையும் கொண்டு சங்கிலியைத் தொட்டுப் பார்ப்பான்; எறிந்து விடுவான் 'இது ஸ்பர்ச வேதிக்கல் இல்லையே' என்று, இது நெடுங்காலப் பழக்க மாகிவிட்டது.

அந்தக் கல் பட்டதால், ஏதாவது மாறுதல் ஏற் பட்டதா இரும்புச் சங்கிலியில் என்பதைப் பாராமலே கல்லை வீசியெறிந்து விடவும் தொடங்கி விட்டான். இப்படி எத்தனையோ நாள் நடந்து கொண்டிருக்க, அதற் கிடையே ஒரு நாள் உண்மையான ஸ்பர்சவேதிக் கல்லை கண்டு பிடித்திருக்க வேண்டும்!

இந்தக் கவிதையின் சிகரஜோதியாக அமைந்திருக்கும் பகுதியைத்தான் என்னென்பது? சூரியாஸ்தமனம் சமயம். வானம் பொன் தகடு வேய்ந்தது போல் இருக்கிறது. மறுபடியும் வழக்கம்போல் கல்லைத் தேடும் வேலையில் கவனத்தைச் செலுத்துகிறது அந்த ஸ்பர்ச வேதிப் பைத் தியம்.

'அவன் உடல்வலி குன்றிப் போயிருந்தது; முதுகு கூனாப் போய்விட்டது. இதயம் மண்ணில் விழுந்து கிடக்க, வேர் அறும்படி வெட்டிச்சாய்க்கும் மரம்போல் ஆகிவிட் டான்' என்று முற்றுப் பெறுகின்றது இந்த ஸ்பர்சவேதிப் பாட்டு, பொருள் என்ன? பயன் என்ன? 'இக்கவிதையே

தான் இதன் பொருளும் பயனும்' என்றே கவிரவீந்திரநாதர் பதில் சொல்லியிருப்பார்.

இப்பாட்டை மொழி பெயர்த்துத் தந்திருக்கும் திரு. கி. சந்திரசேகரன், 'வாழ்க்கையில் எதையோ அர்த்தமில்லாமல் தேடிக்கொண்டு உயர்ந்த சந்தர்ப்பங்களையெல்லாம் கைநழுவ விட்டுவிடும் மாந்தர்களைப் பற்றிய உயர்ந்ததோர் குறிப்பு எனலாம் கீழே வரும் பாட்டை' என்று முகவுரையாகக் கூறியிருக்கிறார். இதைப் புதைப் பொருளாக, இத்தகைய நிலையைத் தம் சுற்றுப் புறங்களிலும் சொந்த நாட்டிலும் உலகத்திலும் தாகூர் கண்டு பிடித்திருக்கிறார். அது இவர் கவியுள்ளத்தைப் பெரிதும் பாதித்திருக்கிறது என்ற ஆத்மசரித்திரப் பகுதியும் இக்கவிதையில் ஊடுருவிக் கிடப்பதாக உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

வாழ்க்கை வரலாற்றுப் புத்தகங்களில் ஒரு கவிஞனின் குடும்ப நிலை, குழந்தைப் பருவம் இளமைப் பருவம் சூழ்நிலை கல்விப்பயிற்சி இல்லற வாழ்க்கை யாத்திரை வேறு நிகழ்ச்சிகள், குணதிசயம் முதலான பல அம்சங்களைக் காண்கிறோம். இந்த மேதை எப்படி உதயமாயிற்று? அஸ்தமனத்திற்கு முன் இந்தக்கலைக்கதிரவன் அடைந்த அனுபவங்கள் எவை, சுற்றுணர்ச்சிகள் எவை? இத்தகைய வினாக்களுக்கு விடை காண முயல்வதும் வரலாறு எழுதும் ஆசிரியனின் கடமைதான். கவிஞன் உள்ளபடியே தற்சரிதம் எழுதும் ஆற்றலும் பெற்றிருந்தால் அத்தகைய ஆத்ம கதையில் கவிஞனின் சொரூபம் மேலும் தெளிவாய்ப் புலனாகியிருக்கும். ஆனால் சிறந்த கவிஞனின் ஆத்ம சரிதம் அவனது கவிதையிலேயே காணப்படுவதாகும்.



## ஆசிரியரின் பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| ஆண்டாளும் மீராவும் | ... | 3—75 |
| இராமனும் முருகனும் | ... | 3—75 |
| நந்தனாரும் திருப்பாணாழ்வாரும் | ... | 3—75 |
| காந்தியும் லெனினும் | ... | 3—75 |
| கபீர்தாசரும் தாயுமானாரும் | ... | 3—75 |
| மாணிக்கவாசகரும் நம்மாழ்வாரும் | ... | 4—50 |
| வள்ளுவரும் சாக்ரடீசும் | ... | 4—50 |
| காந்தியும் வினோபாவும் | ... | 4—50 |
| இராமகிருஷ்ணரும் இராமலிங்கரும் | ... | 4—50 |
| பாரதி நான் கண்டதும் கேட்டதும் | ... | 2—50 |